உ

கணபதி துணை.

திருநெல்வேலியைச்சார்ந்த

சங்கரநாராயணசுவாமி

# கோயிற்புராணம்.

---

## சீவலமாறபாண்டியரால்

பின்னேழுசருக்கமும்

திருநெல்வேலிஜில்லா ஊற்றுமலைச்சமஸ்தானவித்துவான்

புளியங்குடி

## முத்துவீரக்கவிராயரால்

முன்னூறுசருக்கமும்

இயற்றப்பட்டது.

~~~~~~~~~~~~~~

இஃது

அவ்வரண்மனைமனைவர்த்தனைவிசாரிப்பு

நவநீதகிருஷ்ணபிள்ளை குமாரராகிய

புத்தகவியாபாரம்

சொக்கலிங்கப்பிள்ளையால்

சென்னபட்டணம்:

வித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

பார்த்திப௵ தைமீ
~~~~~~~~~~~~~~

# சூசிபத்திரம்.

2225

உ
கணபதி துணை.
திருச்சிற்றம்பலம்.

# சாற்றுகவிகள்.

சேற்றூர்
சிதம்பரக்குருக்களையா அவர்கள்
இயற்றியது.

துப்புவனத்தணிகரத்தான்றந்தமுதம்பொன்னுலகிற்சுரர்க்கல்லாம, லப்புவனத்தெழில்வளஞ்சேர்புதுவைநகர்முத்துவீரப்பவான்றோன், செப்புவனத்தமிழ்பொருந்துங்கோமதிசேர்சங்கரற்குச்செயுநூல்போல, முப்புவனத்தவருமுட்கொளமுதமொன்றுண்டேலெமக்குமொழிகுவீரே. (க)

அந்நாளின்மாயவர்காண்டற்கரியரின்றுரியராயொன்றாகிப், பன்னாளிற்சங்கபத்மர்செயுந்தவத்தால்வந்தருள் சங்கரரின்பான்மை, யிந்நாளிற்றமிழுதனிற்சிராசைப்புராணமெனவியற்றல்செய்தா, னெந்நாளுமுச்செல்வம்பெருகுமுத்துவீரதமிழியல்வல்லோனே. (உ)



சேற்றூர்
இராமசுவாமிக்கவிராயர்
இயற்றியது.

கோவலனுமரனுமொன்றென்றுரைப்பதைமெய்யென்னமெய்யிற்கொண்டோரியார்க்கு, மாவலுறும்வரராசைப்பதியரன்மான்மியத்தைவியந்தணியாயிந்தப், பூவலயத்தோர்க்கமிர்தாய்ப்பொருட்சுவைசொற்சுவைபொருந்தப் புராணஞ்செ

ய்தான், பாவலராற்றினங்துதிந்துமெச்சுமுத்துவீரதமிழ்ப் பாவலோனே. (௩)



மேற்படியூர்

இராமசாமிக்கரையாளர்

இயற்றியது.

தாமச்சடிலத்தர்சங்கரநாரணர்தன்புகழை
வாமச்சனகமுனியுரைத்தாலென்னவான்புவியிற்
பாமச்சரமின்றிச்சீராசைப்புராணம்பகுத்துரைத்தா
ளுமச்சகலகலைமுத்துவீரப்பநாவலனே. (௪)



கல்போது

புன்னைவனக்கவிராயர்

இயற்றியது.

இமிழ்திரைவான்கடலமிர்தம்புலவோர்களுவதற்கேயினிக்குமேன்மை, அமையுமுத்துவீரகவிபூகயிலாயப்புராணமன்பாய்ப்பாடிந்,தமிழமிர்தாவினிக்குஞ்செவியினிக்குமனமினிக்குந்தமிழோர்க்கென்றும், சுவைபுலகினிவ்வமிர்தத்தின்பெருமையெவரறிந்துசொலவல்லாரே. (௫)



சின்னிகுளம்

திருவானந்ததேசிகர் மடாலயாதிபதியாகிய

சுந்தரசுவாமிகளியற்றியது.

அத்தியுரியார்புயத்திலத்தியுரியார்புனைக்காவதனில்வாழுஞ், சத்திதன்பாகத்திலுறைசங்கரநாராயணர்வித்தகப்புராணம், எத்திசையும்புகழுமுத்துவீரகவிச்சிங்கமிசைத்திடலாற்சேடன், உத்திமிகப்பெற்றுமொருபதமுமறியாதுநுடங்குடலுற்றனே. (௬)



மேற்படியூர்

## அண்ணாமலைக்கவிராயர்

இயற்றியது.

சிலைப்புடையான்வாகனத்தார்சீராசைமான்மியத்தைச்செய்யவாய்மை, நிலைப்புடையானெங்கள்முத்துவீரவல்லோனுரைத்தல்கண்டுநேமிமாதின், மிலைப்புடையார்குறுமுனியும்வேலவனுமாமதியும்வியனென்றாழும், மலைப்புடையானோர்மையிலான்களங்கன்றோராதவனுமன்னினரே. (எ)



சொக்கம்பட்டி

## பெரியசுவாமித்தேவரியற்றியது.

கன்னல்ரசமிகுவசனமுத்துவீரக்கவிஞன்கருணைகூர்ந்த, புன்னைவனச்சங்கரராவுடைதலத்தின்பெருமைதனைப்புராணமாகச், சொன்னசெய்யுளறிந்தலவோகுறுமுனிதென்வரைமறைந்தான்சுகமாராய்ந்தில், கின்னமிவர்க்கிணைதேடியிரவியும்பொன்வரையைச்சூழ்ந்தேகின்றானே. (அ)



செவ்வற்குளம்

## கந்தசாமிப்புலவரியற்றியது.

விரிதரணிபுகழ்முத்துவீரகவிராசனென்னும்வித்துவரத்தினந், திரிதமிழின்சுவையைவடித்ததிபாகரசமாக்கிச்சிறந்தகாந்தி, புரிதவளமதியணிதென்வரராசைச்சங்கரசம்புவின்மேன்மெய்யாஞ், சரிதபுராதனத்தைநன்மதுரிதபுராணக்கவியாய்ச்சாற்றினனே. (கூ)



சங்கரநாராயணசுவாமிகோயில்

## சுவாமிநாதக்கவிராயரியற்றியது.

பூமேவுபுன்னகைப்பூமணமும்புகழ்மணமும்பொலியுஞ்செல்வம், மாமேவுவரராசைமான்மியத்தைக்கலைமாதுவரம்பெற

ஞேங்கும், நாமேவுமுத்தமிழுமொருங்குணர்ந்தநயகுணநன் ஞானச்சிரான், மீமேவுகீர்த்திமுத்துவீரகவிபுராணமதாய்வி ளம்பினனே. (௧0)



மேற்படியூர்

## பூசைப்பிள்ளையியற்றியது.

பஞ்சகிர்த்தியங்கள்செய்திடும்பொருட்டிப்பறபலவடிவமா ம்பரமன், விஞ்சையர்பரவும்புன்னைமாநகரில்விண்டுருவொ ருபுறங்கொண்டோ, னெஞ்சலில்கதையைத்தமிழினுற்புரா ணமிசைத்தனனெங்கணும்புகழச், செஞ்சொலாற்புதுவைந கர்முத்துவீரநாவலர்சிகாமணிதெளிந்தே. (௧௧)



மேற்படியூர்

## திருமலைவேலுவுபாத்தியாயர்

இயற்றியது.

செவ்வளிபாண்மிழற்றுபுன்னைவராசைமான்மியத்தைச்சீ ர்மையாக, வெவ்வொருசொற்பொருளுமினிதாகமுத்துவீரநா வலனுணர்ந்தின், றவ்வுலகத்தமரருக்குமுன்னொருகாலரிய ளித்தவமுதம்போல, இவ்வுலகத்துறையுமடியார்களுக்குப்பு ராணமதாயியற்றினனே. (௧௨)



மேற்படியூர்

## அருணசலம்பிள்ளை

இயற்றியது.

மங்குல்செறியும்பொழில்புடைசூழ்மாசீராசைமான்மியத் தைத், திங்கள்வதனன்சீவலமாராசன்முன்னுட்செய்தவை யோ, டங்கமாழவிருச்ருக்கமுத்துவீரான்றேனமைத்துப், பங்கமறவேகுறைதீர்த்தபான்மைகாணிலிவனவனும். (௧௩)



வீரகேரளம்புதூர்

## திருமலை அய்யங்காரியற்றியது.

கத்துகடலாடையாட்கணிகலமாகியநகருட்காமர்மோலி, நத்தினங்கள்செறியும்வயனறவுகும்புன்னகவனநாதர்காதை, முத்துவீரக்கவிஞன்முத்தமிழ்த்தெள்ளமுதகவிமொழிந்ததாலே, பத்துநூற்றுச்சிரப்பன்னகனுலுமதன்பெருமைபகரற்பாற்றே. (கச)



மேற்படியூர் அரண்மனைச்சம்பிருதி

## திரவியம்பிள்ளை

இயற்றியது.

நத்துநளினத்தருடரளநகுவெண்கதிர்கான்றிருள்பரந்து
தத்தும்போதும்பகலெனச்செய்தடஞ்சூழ் சீராசைப்பதியிற்
கத்துந்தரங்கக்கங்கைமுடிக்கடவுள்விளையாட்டருட்சரித
முத்துவீரக்கவிராசன்மொழிந்தான்றமிழின்சுவைபெறவே.()



இடைசெவல்

## இராமாநுசகவிராயரியற்றியது.

சலசைவளர்வரராசைச்சங்கரன்மேலூற்றுமலைச்சமஸ்தானத்துப், புலவர்பதிமுத்துவீரக்கவிஞனுரைத்தமகாபுராணநோக்கி, இலகயிற்கைமுருகனச்சங்குலவுமலைவாயிருந்தானிணையில்வாணி, அலருறுவேதனையடைந்தாள்கும்பன்மெல்லநிலநகவாயடங்கினனே. (கக)



வாசுதேவநல்லூர்

## பழனியாண்டிப்புலவர்

இயற்றியது.

பொங்கரவாரம்புனைபுனைச்சங்கார்பெருற்பதத்தின்
மங்களமாகத்தமிழாலமுதமதாமிகு

துங்கப்புராணத்தொடைசார்த்தினன்சுகந்தோயுமதி
சிங்கமெனுமுத்துவீரகவிக்குருதேசிகனே. (கள)

உக்கிரமனுதியர்களுவந்துதொழச்சங்கரன்மாலுருவொன்
றாகி, வக்கிரமதின்றிவளர்புன்னைவனமான்மியத்தைவானே
ரேத்த,சுக்கிரமகாகவிபுள்வெள்கமுத்துவீரகவிசொல்புராண
ம்,விக்கிரமவற்சரமீனேறுதிங்களரங்கேற்றிவிளக்கினனே. ()



மேற்படியூர்

## கந்தசாமிப்புலவரியற்றியது.

வளம்பலவாகச்செறிவரராசைமான்மியமதைமுடியரசர்,
களம்பலம்வியக்கும்புகழ்முத்துவீரக்கவிவலோன் புராணமா
வுரைத்த, அளம்பலரோனையெரித்தவனையவகத்தியன்கே
ட்டிவைநம்மால், விளம்பலரிதெனக்குறுகிமெய்யசந்துமிகு
மலைவாயிருந்தனனே. (கக)



புளியங்குடி
## ஆண்டியாபிள்ளை
இயற்றியது.

சந்திரசடாதாரியெழில்வரராசைச்சங்கரர்மேற்றமிழோர்
வாழ்த்த, எந்தவுலகும்புகழவடமொழியைத்தென்மொழியா
யியாவருக்குஞ், சிந்தனைசெய்தொறுமமுதாய்த்தித்திக்கப்பு
ராணமொன்றுசெய்தான்செய்யில், நந்துலவும்புதுவைமுத்
துவீரகவிப்புலவர்சிரோரத்நந்தானே. (உ௦)

கணபதி துணை.

சேற்றூர்சமஸ்தானம் வித்துவான்

மு க வூ ர்

கந்தசுவாமிக்கவிராயரவர்களியற்றிய

# சிறப்புப்பாயிரம்.

---

திருமலிசெந்தாமரைத்திருமகளு
மருமலிவெண்டாமரைத்திருமகளுங்
கலந்தினிதுறையக்காவலர்போற்ற
நலந்தருகற்பகநாட்டரசென்னப்
பொன்னினுமணியினும்புனையரியாசனத்
தின்னியற்பாவலரேத்தவீற்றிருப்போன்
சிவகன்பாஞ்சாலன்சிலைமதனன்
மூவருமொன்றாய்முளைத்தெழுசொரூபன்
ஆயிரம்பணத்தலையரவுபொறைநீங்கப்
பாயிருங்கடற்புவிபரித்திடும்புயத்தான்
பருவரைநாட்டிப்பாந்தளைப்பிணித்துநின்
றிருபுறந்தேவருமசுரருமீர்ப்ப
வருந்திப்பாற்கடல்வயிறுளைந்தீனுந்
திருந்தியவசனத்தெள்ளமுதுடையான்
பொதியக்கடமுனிபுணரியுண்டடக்கல்போன்
மதியுட்டமிழ்க்கடல்வரம்புகண்டமைத்தோன்
நீதியிற்சோழனிதிக்கரன்றோழ
னேதிலர்திறைதந்திறைஞ்சுபொற்றாளினன்
களங்கமுங்குறைவுமெக்காலமுமின்றி
வளம்பெறநிறைந்துவளர்மதிக்குடையான்

கைக்களிறெட்டுங்கனமுதுகேந்துந்
திக்கெலாம்விசயஞ்செலுத்தியவென்றியான்
பொற்றருவைந்தும்புகழ்நிதியிரண்டும்
விற்றருமணியும்மேதகுசுரபியும்
வெள்ளநீர்க்கடலுண்மேய்ந்தெழுமேகமும்
வள்ளன்மூவேழுமோர்வடிவமாத்தோன்றி
அந்தணர்கவிஞரறத்துறைமுனிவர்
வந்துகைநீட்டியமற்றெவரேனு
மகத்தினின்முன்னியதறிவிக்குமுன்னர்
முகத்தினிற்குறிப்பைமுற்றுறநோக்கி
யங்கவருள்ளத்தவாவின்மேலருளு
மிங்கிதத்தானலக்குமியிசைகரத்தான்
தயவினிற்றருமன்றையிரியவீம
னுயர்தனுவலியினுறுபுகழ்க்கிரீடி
பரியினினகுலன்பரமஞானத்தைத்
தெரிதலினரியருள்சேர்சகாதேவன்
பத்தியினந்தப்பசுபதிபதத்திற்
சித்தம்வைத்துருக்கஞ்செய்தகண்ணப்பன்
செழுமணிமேருவிற்செறிநிதிகொணர்ந்த
வழுதிபோலிந்தமன்னுயிர்புரப்போன்
எவ்வெவரெக்குற்றம்புரிந்திடினு
மவ்வவையெல்லாமகற்றுப்பொறையினன்
ஆம்பணைக்குழலிசைத்தானினம்புரந்து
பாம்பணைப்பள்ளிகொள்ளும்பரந்தாமன்
வாகுத்தகரமுன்வாரணனைச்செற்ற
காகுத்தனெறிதிரைக்கருங்கடல்வண்ணன்
வண்டுருவெடுத்துநீர்வாவியிற்கமலிடைப்
பண்டுவல்வீமனைப்பாதுகாத்தருளினோன்
ஆதிவராகனம்புயத்திருக்கு
மாதிவராகன்வனமாலிகையான்

பாரையுண்டிடந்துபதத்தினலளந்தோன்
சீரையன்றைவர்தேவிக்களித்தோன்
முன்னம்பரத்தைமுளரியம்பாற்செறு
பொன்னம்பரத்தன்போர்வளைக்கரத்தன்
அஞ்சனைசேயனணிப்புயத்தமர்ந்தோன்
கஞ்சனைவென்றுகன்கனைக்கீண்டோன்
கரியினைப்புரந்துகராவினைக்கரந்தோன்
விரிபொழில்சூழும்வீரையின்மேவு
மவனிமாதின்புறறகமகிழ்மணாளன்
நவநீதகிருட்டிணநாராயணனை
இதயபங்கேருகத்திடைவிடாதிருத்திப்
பதயுகளத்தைப்பரவியபண்பினன்
அப்பணிசடைச்சங்கரன்றுணையாமென
வொப்பமிட்டடங்கீட்டிலகெலாஞ்செலுத்துவோன்
தென்னவனுட்டைச்சேர்ந்தமன்னவர்க்கு
மன்னியபொதியமலைபொதுவாகினுந்
தன்னுடவ்வரைச்சார்பினதாகி
யெங்நாட்டினுஞ்சிறப்பெய்துதலானும்
வீரைமாநகரினின்வீதியுமாடமு
மேரணிசோலையுமிலஞ்சியுந்துடனவயு
மில்லின்முற்றத்தினெழினடைபயிலுஞ்
செல்வச்சிறுரெனச்செழுஞ்சாந்துயிர்த்த
வாசனைகுலவவருசிறுநிதென்றல்
வீசிமெய்க்கின்பம்விளைத்தலினனுந்
தன்னவையகத்தச்சைவக்குறுமுனி
சொன்னசெந்தமிழொலிதுன்னுதலானு
மதியுடையோரிம்மன்னவன்றனை
பொதியத்திறைவெனப்புகன்றிடப்பெற்றேன்
அல்லியுங்குவளையுமவிருமுண்டகமும்

வல்லியர்வாய்கண்மலர்முகமென்ன
வொளிர்தரநளிர்முத்தொண்டைகொழித்துத்
தெளிபுனல்விரைந்தெழுசித்திரநதியான்
பொன்னாட்டவர்குடிபுக்கிடவிரும்புந்
தென்னாட்டரசுசெலுத்துசிவலவன்
நன்னூல்விருத்திபுனைநிலைநாட்டிய
தென்னூற்றுமலைச்செழுமாநகரினான்
நெஞ்சினுளறிவுமேனிலவுதல்போல
விஞ்சியசுவேதமிளிர்முல்லைமார்பினான்
காயும்வெங்கதிர்ப்பரிகண்டுளங்கலங்க
வாயுமண்டலத்தின்மேல்வாவுவன்பரியினான்
காதியெண்வரையைக்கடிந்துகளாக்கி
மாதிரக்கயத்துடன்மாறுகொள்கயத்தான்
பஞ்சவர்னக்கொடிபாயனுமக்கொடி
விஞ்சியகருடக்கொடிமிளிர்வாயிலான்
தானமுமணமுந்தரியலர்மேற்செலுஞ்
சேனையின்பெருக்கமுந்தேற்றமும்முரசினான்
ஆனும்புலியுமோர்துறைநீரருந்த
நானிலத்தென்றுநடாத்துசெங்கோலினான்
வருதயாவினுக்குவண்பாற்கடலனைய
இருதயாலயமருதப்பநரேந்திரன்
வடமொழிப்பௌடோத்திரமகாபுராணத்
தடைவுறவியாசனன்றறைந்தவைதெரிந்து
சங்கரநாராயணர்தலபுராணஞ்
செங்கோல்வழுதிசிவலமாறன்
சங்கபத்மருக்காத்தாமரைக்கண்ணனுங்
கங்கைசூடியகடவுளுமோருருக்
காட்டியசருக்கமுதலேழ்கணிப்பா
யீட்டுசெந்தமிழாலியற்றியதுடனே

நித்தலுந்தன்சமுகத்துநீள்புகழ்துதி
முத்துவீரக்கவிஞன்மொழிந்திட்ட
நதிநாடணிநகர்நற்றலந்தீர்த்தங்
கதிதருமூர்த்தியைக்காட்டியசருக்க
மாறையுஞ்சேர்த்தவ்வரனருள்விளங்க
வீறிலாதாகவிவ்விம்மையுமறுமையுஞ்
சீர்த்தியுநன்மையுஞ்செகத்தினிலைக்கவுள்
ளார்த்தமாங்கடவுண்மேலன்பினைச்செலுத்திச்
சொல்வகைபொருள்வகைதொடரியாப்பின்வகை
நல்லவையோருளநாடொறும்வியக்கக்
கூர்மையாயாய்ந்துகொழிதமிழ்தழைக்கப்
பார்வையிட்டச்சிறப்பதிப்பிவித்தனனே.



திருவிளையாடலைப்பாண்டியர்க்காகச்செய்தருடென்மதுரைநாதர், கருவிளையாடனைநிகர்க்குங்கண்ணிசையம்பிகையோடுங்காதலாக, வுருவிளையாடனிநாதனுடனென்றுய்க்காட்டிபுன்னைவனப்புராண, மருவிளையாடற்புயமால்மருதப்பமன்னரங்கேற்றிடச்செய்தானே.

சிறப்புப்பாயிரமுற்றிற்று.

கணபதி துணை.

சங்கரநாராயணசுவாமிகோயிலென்னும்

# கோயிற்புராணம்.

## தெய்வவணக்கம்.

### விநாயகர்.

மும்மைப்புவனமுழுதீன்றமுதல்வியோடும்விடைப்பாக, னம்மதருகமுத்தமெனவணைப்பவாங்கேசிறிதகன்று, தம்மின்முத்தங்கொளநோக்கிச்சற்றேநகைக்கும்வேழமுகன்,செம்மைமுளரித்திருத்தாளென்சென்னிமிசையிற்புனைவாமே. (க)

பைநாகந்தொழுதேத்தப்பானிறமெல்லரும்பவிழ்ந்துபைந்தேனூற்றும், புன்னைவனத்துறையும்புராதனன்றென்னூல்வேட்கைபுரிந்துகூற, மைநாகத்துடன்பிறந்தமலைமடந்தைதிருவயிறுவாய்ப்பவந்த, கைநாகப்பசுங்குழவிகாமருசேவடிக்கமலங்கருதுவாமே. (உ)

காராசைவலமாவென்றிசைக்குமெழிற்கருங்கூந்தற்கனத்துவிம்மி, வாராசையுடன்மருவுவளர்தனக்கோமதிமலைக்குவேந்தாய்மன்னும், பேராசைமலைமகள்சேர்சிவசங்கரேசர்புகழ்பேசச்செல்வச்,சீராசைத்திருநகர்வாழ்சிந்துரமாமுகன்றிருத்தாள்சென்னிசேர்ப்பாம். (ங)

### சங்கரலிங்கர்.

நீர்கொண்டசெழுஞ்சடைமேனிலவுமிழ்வெண்பிறைவயங்கநெடுவான்பூத்த, வேர்கொண்டதரகையினிடையிடையேதவளமுகையீன்றுதோன்றுங்,கார்கொண்டபுன்னைவனங்காமுற்றுவாழ்கருணைக்கடலைமல்லற், சீர்கொண்டசீராசைத்திருநகர்வாழ்சிவக்கொழுந்தைச்சிந்தைசெய்வாம். (ச)

## ஆவுடையம்பிகை.

நாவினிற்பரவிப்பல்கானனேகமழ்நறுந்தண்போது
தூவிவீழ்ந்திறைஞ்சுநாகச்சூட்டொளிர்மணியின்சோதி
மேவலாற்பஞ்சியூட்டிவிளங்கியவண்ணங்காட்டு
மாவுடைமாதுசெம்பொனடித்துணைசென்னிவைப்பாம். (௫)

## விநாயகர்.

ஒருமுலைசுரந்ததீம்பாலுண்புழிமழலைத்தீஞ்சொன்
முருகனுக்கென்றேயின்றமுதல்விவைத்திருந்தமற்றைத்
திருமுலைவருமென்போற்றிரள்புழைக்கரத்தாலுண்ணும்
வரிநுதற்களிற்றின்செந்தாமரையடிவணங்குவாமே. (௬)

## சுப்பிரமணியர்.

மாமுதறடிந்தவொள்வேல்வலந்தனுயிருந்துங்கோடி
காமர்வண்டுழலுங்கூந்தற்கதிர்முலைவள்ளிமைக்கட்
டாமமவேல்புரளுந்தோறுந்தனதுளங்குழையுஞ்செவ்வேள்
தேமருகமலமன்னசேவடிசென்னிவைப்பாம். (௭)

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

இழிதொழிலமணரென்னுமிருள்கெடுத்திமையோர் போற்ற
பழுதறநின்றதொல்லைப்பரம்பொருள்விளங்கச்செய்த [ப்
பொழிகதிரவிதன்னிற்பொழில்புனைபுகலிவாழும்
வழிமதுக்கமலப்பைந்தார்வள்ளலைவணங்கல்செய்வாம். (அ)

## திருநாவுக்கரசுநாயனார்.

கரைபொருதிரங்குவிரிதிரைக்கடலிற்கட்டினரிட்டகற்றி
ரளே, பரிவுறுபுணையாயதனில்வீற்றிருந்துபழுத்தபாண்மிழு
ற்றுவண்டினமார், முருகவிழிதழித்தொடைசடைமுடித்த
முதல்வனைவழுத்தியகோமான்,மருவுயிர்த்தினியமுருகுகொ
ப்பளிக்குமலரடிவணங்குதல்செய்வாம். (௯)

## சுந்தரமூர்த்திநாயனார்.

ஏனமாய்மாயோன்வேலையிருநிலங்கீண்டுங்காணுத்
தேனவிழ்கமலமன்ன சேவடிபடியிற்றோய

நானவார்குழலிபங்கினுக்னைத்தூதுவிட்ட
வானுலாம்பொழில்சூழ்நாவலன்மன்னனைவணங்கல்செய்வாம்.

## மாணிக்கவாசகசுவாமிகள்.

கள்ளயின்றுகளிக்கும்வரிச்சிறைப்
புள்ளலம்புபொழில்புனைவாதவூர்
வள்ளன்மாணிக்கவாசகன்சேவடி
யுள்ளமன்புற்றுருகவணங்குவாம். (௧௧)

## அகோரசிவாசாரியர்.

பாயுமால்விடைப்பாகனவிற்றிய
தூயவாகமநூற்றுறைபோய்மறை
ஆயுங்கேள்வியகோரசிவனடிச்
சேயதாமரைசென்னியிற்சூட்டுவாம். (௧௨)

தெய்வவணக்கமுற்றிற்று.



## அவையடக்கம்.

கடகரிபுரித்தகடவுண்மான்மியத்தைக்கவின்பெறுபாடை
கட்கனையாம், வடமொழிதன்னிற்பவுடியோத்தரமாபுராண
த்தின்வகுத்ததையறிவின், மடமையேன்றமிழாற்சொல்லுந
றெய்வமாநதிக்கெதிர்சிறுவாய்க்கால், இடைவருபுனலொப்
பென்னினும்பெரியோரிகழ்ந்திடாரீசன்காதையினால். (௧௩)

# திருநதிச்சருக்கம்.

சங்கபத்மர்செய்தவத்தினுக்கரனரிதானு
மெங்குமொன்றெனத்திருவுருக்கொண்டருளிமைய
மங்கையாவுடைமணாளர்தம்பெயரினைமருவிப்
பொங்கியேயெழுங்கூழையாற்றணியினைப்புகல்வாம். (௧)

முக்குணத்தினின்முதற்குணநிறத்தின்வான்முன்னீர்
புக்குநீரருந்திக்கடைக்குணமெனப்புகல்சூ
ழுக்குமற்றிடைக்குணநிறமின்னொளிதோன்றத்
திக்குமம்பரமும்பரந்தெழுந்ததுதிகழ்ந்தே. (௨)

அறுகுமம்புலியாமையோடணிமுடிக்கணிந்து
செறிமுனிக்குழாஞ்சூழ்தலாற்சிவன்வடிவென்ன
மறுவில்சிந்தைமாயோகர்வாழ்வாழைமாமலைமேல்
நறுமணத்தருவடவியின்மேகநண்ணினவே. (௩)

காழுறுங்கருஞ்சூல்கனத்தார்கனைகுரலிட்
டேழ்தலத்திற்கீழுறும்பணியுட்கமின்னெறித்துச்
சூழும்வானமீன்றனித்தனிகதிர்விடுந்தொகைபோல்
வீழும்வெண்ணிறத்தாரைகள்விரைந்துபெய்ததுவே. (௪)

குன்றின்மீதுபெய்குளிர்மழைத்தாரைகளரனுக்
கொன்றுமன்புடைத்தொண்டர்போலொருவழிக்கொண்டு
பின்னையவ்வரனருளெனப்பெருகிமேலுயர்ந்து
சென்றுகூழையாறெனத்திருப்பெயர்சிறந்ததுவே. (௫)

திகிரிவெஞ்சிலைதாங்கியேசெவ்வியமானு
மகலமீதுறவரவமேற்கொண்டுறுதலினன்
மிகுமூக்கரையெறிதலான்மேதினிபுரக்கு
முகிலையொத்ததுமுழங்கியமூரிநீர்ப்பெருக்கே. (௬)

அலரெடுத்துவண்டணிகொடுமரங்கையிலமையக்
கலகமாதரைமருவியேகாலினேறுதலா
னுலகமியாவையுமமைத்தருள்வயிற்றினனுதவுந்
தலைமையாமதனுமெனத்தழைத்தனனீத்தம். (௭)

உந்திபூத்தலாற்கமண்டலத்துறுகையாலெகின
முந்தியேறலானற்றலைமுகமுறுவதனல்
இந்துசேர்சடையிலைறவனுலொருதலையிற்ற
கந்தநான்மலரயன்றனைக்கடுத்ததுகனைநீர். (அ)

வேலெடுத்துவிண்டுவைப்பிளந்துருவிமேற்கோலஞ்
சாலவேங்கையின்சட்டகங்கொண்டுறுங்கரத்தாற்
பாலலோசனத்தரன்றருகோழியம்பதாகை
நீலமாமயின்முருகனைநிகர்த்தநீர்வெள்ளம். (௯)

அருவியாரமுமடர்சினையாரமும்வரையின்
மருவுகாஞ்சனமலர்த்துணர்க்காஞ்சனம்வாரிந்
தருவரம்பையுந்தடமலைவரம்பையுந்தள்ளிப்
பெருநெடுந்திரைப்பரப்பொடுபெயர்ந்ததுவெள்ளம். (௧௦)

பருங்கயத்தியும்படரிலையத்தியும்பணைத்து
நெருங்குகோடரநெடியவாற்கோடரநீலக்
கருங்கணுகமுங்கடிமலர்நாகமுங்கடிந்து
சுரும்பரார்த்தெழவெழுந்தது தூயநீர்வெள்ளம். (௧௧)

வேறு.

கானவர்சிற்றில்புக்குக்கிழங்ககழ்கருவிகூடை
தானமாக்கோடுபாயற்சருமம்வெஞ்சிலையுஞ்சாடிந்
தேனெடுதினையும்வாரிச்சிறுர்நனிவெருவவார்த்து
நானமுங்கமழச்சென்றுபாலையைநண்ணிற்றன்றே. (௧௨)

எயினராறலையிற்கொண்டபொருளெல்லாமள்ளியெற்றி
மயினிகரெயிற்றிமாதர்மறத்தியர்விழியையன்ன
வயின்முதற்படையும்வெம்போர்த் துடியுமீர்த்தடர்சூற்கொண்ட
புயனிறத்திருமால்காக்கும்புறவம்வந்தடைந்ததன்றே. (௧௩)

மூவினந்தனைப்பரக்குமண்டரைமுடுக்கிக்கையின்
மேவியதடியும்வாயினூதும்வேய்ங்குழலும்வீழ்த்துக் கொண்டு
கோவியருறிப்பால்வெண்ணெய்தயிரெல்லாங்கொள்ளைகொ
காவிரிபண்ணைசூழ்ந்தமருதத்திற்கலந்ததன்றே. (௧௪)

ஐவகைநிலனுநன்னீர்மகடனக்கனையாளுலுஞ்
செய்வகையறிந்துபோற்றுஞ்செவிலியாமருதத்துற்றுத்

துய்யமுக்கனியுநெல்லுங்கொண்டுதன்றுணைவரிற்செல்
லையலரென்னநீத்தநெய்தலிற்சார்ந்ததன்றே. (கடு)

குறிஞ்சியிற்பொருளையெல்லாம் பாலையிற்கொண்டங்குய்த்
மறஞ்செறிபாலையுள்ளபொருளைவண்புறவத்தாக்கிச் [து
செறிந்திடும்புறவத்துள்ளபொருள்செழுமருதத்தாக்கி
நிறங்கிளர்மருதத்துள்ளநெய்தலிற்புகுத்தமாதோ. (கசு)

வேறு.

நாற்றிசைப்பெரும்பொருளைநாற்புருடர்நல்கிடினுங்
கோற்றெருடிக்கரச்சூழைபர்குணமற்றோர்புருடர்க்
கேற்றவின்பமதளித்தவர்பொருள்கொளவேசுங்
தோற்றமாமெனத்தொடுகடற்புகுந்ததூவெள்ளம். (கஎ)

நால்வகைப்பெருஞ்சேனைகள்சமர்க்களநண்ணிக்
கால்பெயர்த்திடினென்றுவேறென்றுடன்கலத்தல்
போல்வரைத்திணைப்பொருள்முதற்பொருளெலாமயக்கி
நீலவார்கலிகலந்ததுகிறைந்தநீர்வெள்ளம். (கஅ)

மலையினரமும்புறவினற்றளவமுமவணைந்திட்
டலையின்மேல்வருநுரைத்துகில்விரித்துடுத்தம்பொற்
சிலையினர்சங்கரேசர்தென்னரியநாட்டுத்
தலைமையாநதிதலைவனுங்கடறழுவியதே. (ககூ)

மனைவிநாயகன்மலரணைநெருங்கிடமகிழ்ந்து
தனதுகைகளைநீட்டியேதழுவிக்கொள்வதுபோற்
கனைகடற்றிரைக்கரங்களாற்கமலமென்முகையாம்
புனைதனத்திணைப்பொருந்திடத்தழுவியதன்றே. (உ0)

வேறு.

அகரமாமெழுத்தொன்றாகியகலமாய்விரிந்துவேறு
தொகைவகைவிரியாய்மல்கித்தோன்றியபகுப்புப்போல
மிகுநதியொன்றுவேறுவேறுவாய்க்காலிற்சென்று
தருகுளந்தடாகமோடையெங்கணுஞ்சார்ந்ததன்றே. (உக)

திருநதிச்சருக்கமுற்றிற்று.

ஆ செய்யுள் - ௯௪.



# திருநாட்டுச்சருக்கம்.



அலகிலாமறைபரவியசங்கரரருளா
லுலகமியாவையுங்கொள்வதற்குறுபயனல்கிப்
பலகலைத்திறம்பயின்றவிப்பாண்டிநாட்டினுக்குத்
திலகமாய்விளங்கியதுதென்னாரியநாடு. (௧)

மாதர்கற்புநன்னெறியினான்மன்னவர்புரியு
நீதியான்மறைவேள்வியானீண்மழைபொழிந்து
கோதிலாப்பெருஞ்செல்வமுங்குறைவறப்பொலிந்தெப்
போதும்நல்லறம்புரியும்பொன்னாரியநாடு. (௨)

கந்தவார்பொழில்கழனிகள்கமலமார்தடங்கள்
சந்தமாமுலைமடவியரானவர்தனைய
ரெந்தநாளுமோர்பான்மையாயிசைபெறவிருக்கு
மிந்தவாரியநாட்டணிதெரிந்தவாரிசைப்பாம். (௩)

குரவன்வாய்மையாற்கலங்குறுமுளந்தெளிகுநர்போன்
மருதமாநிலத்திடைநணிபொருந்தியவளத்தால்
விரவுநன்னதிதடங்களின்மேவியவெள்ளந்
திரமிகும்பளிங்காமெனத்தெளிவுகாட்டியதே. (௪)

மதத்தயானையைப்பாகர்கள்வசப்படுத்துதல்போற்
கதத்தின்மேவியவெள்ளத்தைக்கால்குளங்களினல்
விதத்திலேசெலச்செலுத்திவன்சிறைபுரிந்திரும்பின்
பதத்தமள்ளர்களுழுதொழின்முயற்சியிற்பயின்றார். (௫)

வேறு.

ஏர்தருமூரியேறுமிருங்கடாவினமுங்கட்டிக்
கூர்நுதிக்கொழுக்களாழவுழவறவுழுதுகோட்கள்
சீர்தருநாளில்வானோர்க்கிறைவனுந்தெய்வம்போற்றிக்
கார்நிறமள்ளர்சாலிமுளைதெளித்தனர்களிப்பால். (௬)

நிலமகணகையேயென்னமுளைவெளிதாகிநீட்சி
யலமறுபெரியோருள்ளத்தறிவுபோல்வளர்ந்துமானக்
கலைபுணர்கவிஞர்சொல்லுங்கவியெனவிதழ்விரிந்து
சிலைமகள்வடிவமென்னப்பச்செனத்திகழ்ந்தமாதோ. (௭)

அறநெறியெய்துசெல்வமாமெனவளர்ந்தநாற்றை
மறநெறிக்கூற்றமன்னவாள்விழிக்கடைசிமாதர்
முறநெறிசெவிமாலியானைமுரண்டருமள்ளர்சொலலாற்
பிறபிறசமையபேதம்பிரிதல்போற்பெயர்த்தாரன்றே. (அ)

பெயர்த்ததைநல்லோர்கூட்டம்பெயரினுஞ்சேர்தல்போல
வுயர்த்திடுங்குப்பஞ்செய்தாருழுதெளிச்சேறுநாற
நயத்தழையுரங்களேற்றிநன்முடிகைக்கொண்டேத்தி
வயற்றழைசெந்நெலோங்கவாழ்த்தியேநடவுசெய்தார். (க)

பதித்திடுநாறுமீறியெழுந்திடும்பருவநோக்கி
மதித்திடுமள்ளர்சொல்லான்மள்ளியரெல்லாங்கூடிக்
குதித்திடுஞ்சேல்கள்கூர்வேற்கொலைவிழிக்கஞ்சியோட
வுதித்திடுபகைபோற்றேன்றுங்களைகளைக்களைதலுற்றார். ()

மரகதநிறங்கொண்டோங்கிவளர்ந்திடுபைங்கூழ்குலாய்ப்
பிரபலமாகப்பிள்கள்முதிர்ந்துதோடகன்றுபின்னர்க்
குரகதமுகம்போற்றன்காளுக்கியேதலைகுனிந்து
தரையெனுந்தாயைப்போற்றுந் தன்மைபோனின்றதன்றே.

தன்னியுள்ளமுதமூறிவிளைந்துபொற்சோதியாக
மன்னியசெந்நெனன்றுட்கதிர்கொண்டுமெதுவருந்திக்
கன்னியர்நுதலேயன்னகுயங்களாலரிந்துகட்டி
நன்னிலப்புறமதுட்களங்கள்போற்போர்செய்தாரே. (கஉ)

காரெலாஞ்சேர்த்துக்கட்டுந்தகுதிபோற்கடாக்கள்கட்டிப்
போரெலாம்பிரித்துத்தள்ளியடித்ததிற்பதடிபோக்கிச்
சீரெலாஞ்சிறந்தமள்ளர்தூற்றிநெற்கூட்டிச்சேர்த்துப்
பாரெலாம்புகழ்கணேசர்ப்பணிந்துபின்னளந்தாரன்றே. ()

ஹரிஹரபுத்ரன்காளிக்கமைத்தவோர்குறுணிநல்கிப்
புரவலர்க்காறிலொன்றுநல்கியேர்பூண்பவெல்லாம்
உரியவாய்நல்குவோர்க்குமுள்ளவாறுதவிவந்த
விரவலர்க்கீயவீயக்குறைவிலாதிருந்தவன்றே. (கச)

பண்டிகள்நிறையவேற்றிப்பற்பலநாளதாகக் [னர்த்
கொண்டுபோயில்லிற்சேர்த்துக்குதிர்களி னிறைத்துப்பின்

தண்டலைவரையினுள்ளதண்புறவத்தினுள்ள
பண்டமதியாவுங்கொண்டாரதனதன்பருவம்பார்த்தே. (௧௫)

அறுசுவைப்பதார்த்தநெய்பாறயிருடனமர்சிற்றுண்டி
நறியமுப்பலமுந்தேனுங்கலந்தாலுணவோடன்ன
மிறைதிருவடியர்ப்போற்றிமுகமனேடினிதுநல்கி
நிறைமனைமக்கள்சுற்றம்விருந்தொடுநேர்ந்துண்பாரால். (௧௬)

வேறு.

நந்துலாவியவாவியிற்கின்னரநண்ணுநாரியர்பாடுவர்கின்னரம், பந்துநேர்வனமாதர்பயோதரம்பருவங்கண்டுபொழிவபயோதரம், இந்துதேரைத்தடுப்பனவில்லமே வீசன்பூசைக்கெடுப்பனவில்லமே, மந்திபூகத்தின்வாவிக்குதிக்குமே வயல்களெங்கும்வளரிக்குதிக்குமே. (௧௭)

போனகங்கள்பொருந்துவசத்திரம் பூவையன்னவர்போர்விழிசத்திரம், வானநாட்டைமருவுமிற்கேதனம் வாரியீவர்வறியவர்க்கேதனங், கானமெங்குநற்காய்கனிமூலமே கருத்திலுன்னல்பஞ்சாக்கரமூலமே, மோனயோகர்மடங்களின்ஞானமே முயல்வதாற்கெடுமோகவஞ்ஞானமே. (௧௮)

பங்கயத்தின்மருவுவபாலனம்பத்தரைப்புரிவார்பரிபாலனஞ், சங்கரனரவச்சுனைத்தானமே தான்செய்வார்கடழைப்பர்சந்தானமே, எங்கும்விம்மவொலிப்பனநந்தியே யீசனூர்ந்தங்கெழுவனநந்தியே, மங்கலத்தொண்டர்வாய்ச்சொல்தேவாரமே மாந்தர்நெஞ்சினில்வைப்பதேவாரமே. (௧௯)

மோகமாதர்தருவதுமுத்தமே மூரிநந்துதருவதுமுத்தமே, பாகமாகப்படிப்பதிராகமே பற்றறுந்தவர்நீப்பதிராகமே, வாருசேர்மடவார்நகைமுல்லையே வண்டயிர்நெய்வழங்குவமுல்லையே, தோகையாடுவசோலையரங்கமேசொன்னநேருவதோகையரங்கமே. (உ0)

மன்னரூருவமாவிரதங்களே மகான்கள்செய்வதுமாவிரதங்களே, பொன்னினன்னவர்பூண்முலைச்சந்தமேபூனைந்துவீசுவபொதியவுசந்தமே, தென்னைவாழைவருக்கைகள்காமரஞ் சேர்ந்துவண்டுகள்செப்புவகாமரம், கன்னலன்னகடவுடன்காதையேகருதுங்கேள்வியில்வைப்பர்தங்காதையே. (உ௧)

வே று.

பாவலவர்தன்னுவும்பணிலநிரைதவழ்பணையு
மேவுவதுஞ்செஞ்சொல்லேவிரிநறும்பூஞ்சோலையினும்
வாவியினுமாம்பலமேமடமாதர்தடமார்புங்
கோவியல்நன்முன்றில்களுங்குவிந்திடுவசெழுந்தனமே. ()

வேடனதுபரிக்குலங்கண்மேவிவிளையாடுவது
மாடகப்பொற்கொடியனையாரடிவிழியும்பஞ்சரமே
நீடுபெருஞ்சோலையினுநிறையுடையோர்நெஞ்சகத்துங்
கூடுவதுநன்மைகளேகுறைவிலாத்தன்மைகளே. (உ௩)

பல்வகைப்பூந்தருக்குலங்கள் பணைத்தெழுந்தண்சோலையினு
செல்வர்மனைமுற்றத்தும்விளையாடுஞ்சிறுகாலே [ஞ்
முல்லைநிலத்தாயர்மின்னார்முழங்கிவிலைகூறுவது
நல்லகுலமடவார்கணுடுவதுமருந்ததியே. (உ௪)

முத்திருக்குநகைகமலமுகையிருக்குந்தனமளியை
யொத்திருக்குங்கருங்கூந்தலுடையகோமதிபாகர்
நத்திருக்குங்குழையணிந்தநாதர்திருவருளாலே
சித்திருக்குந்திருமாதுசிறந்திருக்குங்குடியெல்லாம். (உ௫)

தேனுடும்வரியளிகள்சிலைநாடுஞ்சிறுநாணுய்ந்
தானுடுஞ்செல்வமதன்றனைநாடுமிரதியெனும்
பானுடுமொழியார்கடிருவழகைப்பங்கயத்தின்
மானுடும்வானுடும்வளநாடும்வளநாடு. (உ௬)

செங்கதலிமாப்பலாச்செழுங்கனியினறவுடைந்து
சங்கநிரைதவழ்வயலிற்சார்ந்துசாலியைவளர்க்கும் [போ
கொங்கையினல்லமுதருத்திக் குழவியையாய் வளர்ப்பது
லங்கையினுலிந்நாட்டோரறமெண்ணுன்கினைவளர்ப்பார். ()

தோகைசின்றைவிரித்தாடத்தும்பியிராகம்பாடப்
பூகநிரைமேன்மேகம்பெருந்துவமேற்கட்டியென
மாகமிசையடர்சோலைவசந்தருதுகாலத்திற்
றேகமதனிரதியுடன்சேர்ந்தமணப்பந்தரொப்பாம். (உஅ)

சேல்காட்டுங்கருநெடுங்கண்செங்குமுதம்வாய்காட்டும்
பால்காட்டுமொண்டரளப்பந்திதிருநகைகாட்டுங்
கால்காட்டுஞ்செங்கமலங்கரும்பிரசமொழிகாட்டு
மால்காட்டுமாதரைப்போல்வளங்காட்டுமாமருதம். (உகூ)

விடைத்தளையதிறன்மள்ளர்வெண்சாலிகரும்புவயற்
கடைத்தமடைதிறந்துதேனரித்துவருவெண்முத்தை
யிடைத்துகில்கள்சரிந்துவிழவிருகையாலள்ளியள்ளிப்
புடைத்துவிளையாடுவர்கள்புனைமணிப் பொற்றொடிமடவார்.

தெங்கிளநீர்முதிர்ந்துபெருஞ்செய்யில்விழுமோசையினிற்
கொங்குலவுதடவாளைவெருவிவிண்ணின்மேற்குதித்து
மங்குலூடேறியந்தவான்மீனைவெருட்டியும்பர்
பங்கயப்பூந்தடமுழக்கிப்பாய்ந்துபழனத்திலுறும். (நக)

ஆலையேந்திரஞ்சுழல்போததிரொலியுமதகுமடை
கால்கலிங்கதனில்வழிநீர்கடகடெனவதிரொலியு
நீலவிழிமள்ளியர்கள்குரவையிடுநீளொலியும்
வேலையொலியல்லாதுவேறொலியென்றுரைப்பரிதால். (நஉ)

ஊடுவதுங்கூடுவதுமுயிரனையருள்ளுருகப்
பாடுவதும்பாலனங்கள்பகுத்துண்டுமணமாலை
சூடுவதுந்தோழியர்கள்சூழவிளையாடுவதும்
பேடையனமனையார்க்குப்பிரியாதபெருவேலை. (நந)

வேறு.

சூதவனத்தினிலேகுயில்சூழுஞ்
சீதநதிக்கரைசேருமனங்கள்
மாதர்முடித்தமலர்க்கள்விரும்பி
யோதியினிற்குடியாயுறும்வண்டே. (நச)

சிந்துர்வாணுதன்மாதர்திரண்டு
நந்துறைவாவியினுடநலாம்ப
லிந்திரையன்னவரெழில்வதனங்க
ளந்தரசந்திரனுமெனவிள்ளும். (நரு)

சிந்துகளித்திரள்பிறியதேறல்
வந்துவயற்புகவாளையருந்துஞ்
சந்தனவெற்புறுதென்றல்கடாவ
கந்தமலர்க்கொடிகாவினிலாடும். (௩௬)

செம்முகமந்திபிணவொடுசேர்ந்து
கொய்மலர்மெத்தையினன்பொடுகூடுந்
தம்மினமோடெருமைத்திரள்தண்கார்
மைமலிசோலையின்மாநிழறுஞ்சும். (௩௭)

மூலமெடுத்தகிடங்குகண்முற்று
மாலுறுசெம்மணிதீயினைமானுஞ்
சோலையின்மந்திகள்சூழவிருத்தல்
காலுபனிக்குளிர்காய்தல்கடுக்கும். (௩௮)

மைக்குவளைக்கணின்மாதர்தடத்தின்
மொய்க்குமலர்க்குழன்மேலுறமூழ்க
லிக்குவினுக்குடையென்றுறுவாரி
துய்க்குமுகிற்குலமென்றுதுலங்கும். (௩௯)

ஆகமசாரமனைத்துமெடுத்துப்
பாகமதாயரனன்பர்படிப்ப
மோகமுறுங்கிளிகேட்டதைமுற்ற
நாகணவாய்க்குநவிற்றுதல்செய்யும். (௪0)

ஆசையிகந்ததவத்தினரன்பாய்ப்
பூசுவர்வெண்பொடிபூண்பர்கள்கண்டிகை
பேசுவரண்டர்பிரான்றிருநாம
மாசில்விழாத்தெரிசிப்பர்மகிழ்ந்தே. (௪௧)

மன்னவர்நீதிமறுமொருநாளு
மன்னவராணையயர்த்திலராகித்
துன்னியநன்குடிசூழவளர்ந்து
பொன்னிலமென்னுபொலிந்ததிந்நாடு. (௪௨)

கற்புடைமங்கையர்காதலரோடு
பொற்பொடுசேர்ந்துயர்புத்திரரைநல்கிச்

சொற்புரைதீர்ந்துசுகத்தினின்மல்கி
யற்புடன்வாழ்வதிவ்வாரியநாடு·                    (சங)

வேறு.

ஆற்றன்மிகுசெந்தமிழகப்பொருளுரைக்கு
மேற்றமிகுமைந்திணையெனும்பகுதிதம்மிற்
பாற்றினமுறுங்கொடியபாலையையகற்றி
நாற்றிணைமயக்கமதைநன்குரைசெய்வாமே.                    (சச)

வேறு.

சந்தனத்தினிற்படர்தருமாலதித்தண்முகைவான்றோயு, மந்தமால்வரைக்குறத்தியரெடுத்திருளடர்குழற் கணிவார்கள், குந்தநீள்பணைப்பிணைதருவேங்கையின்கொழுஞ்சினைநறவோடு, சிந்துமாமலரிடைச்சியரெடுத்துத்தஞ்செழுங்குழற் கணிவாரே.                    (சரு)

மங்குல்துற்றியவரையினிற்கிழங்ககழ்குறத்தியர்மருங்கெய்திப், பங்கயத்தனமவர்நடைகற்கும்பாட்டளிமுரன்றிடப்பைந்தார்க், கொங்குயிர்த்தபூந்துடவையின்வான்றொடுகுளிர்தருவினினண்ணி, யிங்கிதத்தினன்மொழிகிளியுழத்தியரிடத்தினிற்பயில்கிற்கும்.                    (சசு)

ஒடியுஞ்சிற்றிடைக்குறத்தியர்சிறுகுடி லுச்சியின்மீதேறிக், கொடிகளங்கவர்க்கெய்துநல்வரவினைக்குறிப்புடனெடுத்தோதும், கடிகொள்புன்னையின்காரிருங்கோட்டினின்மயிலினங்களித்தேறித், தொடியணிந்தகையளத்தியர்சாயலைச்சுகமுறப்பயின்றிடும்.                    (சஎ)

முல்லைமானினங்கன்றொடுசாமையின்முதிர்கதிர்களின்மேய்ந்து, நல்லமாமருதத்தினிற்சோலையினறுநிழல்விளையாடு, மொல்லுநீர்த்தடத்துகளுஞ்செந்நாய்கடம்பறழோடுநதியூடு, வல்லையேகிக்கானியாற்றினன்னீரிடைமருவியேவிளையாடும்.

புலவுமீன்கமழ்புன்னையினீழலிற்புகுந்தண்டர்சிறுபால, ருலவிநின்றுசாதாரிபாடுவர்கள் தேனுறு கொன்றைநறுநீழ, லலைகடற்றலையமர்ந்திடுபுதல்வர்களமுதுகுத்தாலன்ன, இல

குசெவ்வழி யின்னிசைகண்ட மொத்திசையப் பாடுதல்செ
ய்வார். (சுகூ)

விரவுசெங்நெலின்முத்தமுங்கன்னலின்விளைபுமுத்தமும
ள்ளிப், பரவர்தங்குலப்பாவையர்பலாகிழற்புரிவர்சிற்றில்கள
பண்பாய்,நரலைவாயலையுந்தியநர்துகணல்குமுத்தமதள்ளி,மர
கதத்தளிர்ப்புன்னைநீழலிற்சிற்றில்வகுப்பர்மள்ளியர்மாதோ.

கருவராவகைமெய்யடியவர்க்கருள்கருணையங்கடல்புற்றின்
மருவராவிருவரும்வழிபடுதற்குமாலுமீசனுமான
விருவராகமுமேகமாய்ச்சராசரமியாவையுந்தந்தென்று
மொருவரானவராசியநாட்டெழிலுரைப்பதற்கெளிதாமோ.

திருநாட்டுச்சருக்கமுற்றிற்று.

ஆ செய்யுள் - அச.

# திருநகர்ச்சருக்கம்.

பணியினுக்கமுகுபுரிமதிச்சடையார்பரவியபத்தர்தம்பிறவி
ப், பிணியினுக்கமுதாங்கூழைநாயகர்வாழ்பெருமையாற்பெ
ருவிலைமதியா, மணியினுக்கழகாம்வயிரமேபோலவளர்கிலந்
துள்ளமாநகரி, னணியினுக்கெல்லாமணிசெய்சீராசையணிந
கர்ச்சிறப்பினையறைவாம். (க)

அன்னவாகனனுங்கருடவாகனனுமணிமுடியடியறியாத,வ
ன்னவார்சங்கக்குழையினர்கூழைநாயகர் மருவியவலத்தாற்,
பொன்னவாநகரும்பூவினைகரும்போற்றுஞ் சீராசைப்பொ
ன்னகர்ச்சி, றென்னவாவாலேயியம்பலாமென்னவெண்ணுத
லேழைமைத்திறமே. (உ)

இரவிதன்கிரணமற்பமுஞ்செல்லாதிருணிறைநிழற்றவின்
னிற், பரவியதருவின்மேற்றருவாகிப்பணைகணிண்டரும்பல
ர்மதுக்காய், விரவியகனிகண்மூவிருருதுவுமிக்கவாய்வழங்கி
மேற்புரிசை, மருவியவகழிப்புறத்தினின்வளர்ந்துவளர்ந்தது
வளந்தருசோலை. (ந)

துணைகளும்பேடுமாகவண்டினங்கள்சூழ்ந்துபூந்துளிமது வருந்தி, யிணர்களிற்குடைந்துதாதுகளுயிர்க்குமெழின்மரத் தொருசிறையிருந்து, மணமுடித்திளஞ்சூன்மருவியமந்திவா வுறுதெனவயினணைத்துப்,பணைகளிற்கடுவன்பாய்ந்திடுசோ லைப்பரப்பினைப்பகரலாம்படித்தோ. (ச)

மொய்மதிதரித்தார்முதுகரியுரித்தார்மூவுலகத்துயிர்க்கெ ல்லா, மிம்மையோடிருமைப்பயனருள்கடவுளிறைதிருநக ரெயிற்புறம்போ, யெம்மையேகாப்பாயெனக்கிடந்தரற்றினி சைவிலாவுவர்க்குணமகற்றிச். செம்மையேபுரிவரெனத்தி ரைக்கடல்சூழ்ந்தாலெனத்திகழ்ந்தபேரகழி. (ரு)

வாளரவுலகிற்கீழதாயாழ்ந்தவாழமுமற்றதன்விரிவு, நீளமு ங்கணக்கானிலைபடாமையினு னிறைபரம்பொருளென வண் ட, கோளமுங்கடந்தகாப்பினுச்சியின்மேற்குலவியகொண் டல்கள்படித, லுளமங்கரிற்கயங்களவ்வகழியடைந்துநீரு ண் ணுதனண் ணும், (சா)

இடங்கருஞ்சுறுவும்வாளைபுங்கயலினினங்களுங்கடமு நெருங்கித், தொடங்குபோர்புரியநீங்குசைவலத்தின்றொத்து கடொடர்ந்துபின்மூடன், மடங்கொன்மெய்யறிவுநீங்கியகா லத்தெய்திடுமாயையைநிகர்க்கும், கிடங்கரின்பெருமைபுற க்கடற்பெருமைக்கெண மடங்காவதேகிளக்கின். (எ)

அல்லிவெண்கமலஞ்செங்கமலங்களாம்பல்களலரகழியினி ற், புல்லியசிறைவண்டினமெலாங்கூடிப்புதுநறுவுண்டுபண் புகறல், வல்லியாவுடைசங்கரர்திருப்புகழைவண்டுருக்கொ ண்டுவானவர்கள், சொல்லிசைப்பாட்டான்மதிற்புறத்துற்று த்துதித்தல்போற்சொல்லலாந்தகைத்தே. (அ)

அறமுதல்வளர்க்குமம்மைகோமதியங்குறைதலாலவட்ட ரும்வரைநாற், புறமுகங்களினுநான்குருக்கொண்டுபொருந் திகின்றதுகொலோபூமே, லுறைமுதல்வனுநாரணனுநாடரிய வொருமுதலும்பர்வானவர்நன், னிறைமுனிக்கணமும்பரவி யசங்கரேசுரர்நீணகரிஞ்சி. (கூ)

வான்முடியளக்குந்தன்மையாற்றிருமான் மலரடிகிகர்த்தி டும்வான, மேன்மதிமேகமேவுறுதலிஞல்விரிசடைவிமலனை ப்பொருவும், கான்முகந்துண்ணுஞ்சேடன்மாமுடிமேற்கன முறவடித்தலங்கதுவி, நூனயந்தெரிந்தசிற்பரும்பார்த்துநுவ லுதற்கரியதங்கொச்சி. (க0)

நால்வகைச்சேனைபொருந்தலாற்பொறிகணன்னலாலி யாணராற்றிருந்து, நூல்வழிநடத்துந்தன்மையானன்னீர்ம ருவலானேக்குவோர்க்கினிமைப், பாலதாய்ப்புகழும்பான் மையேயுறலாற்பாய்திரைப்பாவைசூழ்கிடந்த, தாலமேழ்பு ரக்குமரசருக்கிணையாச்சாற்றலாந்தடமதிற்சிறப்பே. (கக)

நாற்றிசைப்புரிசைநடுவினினிறுத்துநன்னிலேவாயில்கணு ங்கின், றேற்றமதுரைப்பிற்றெல்வீதிமுகமோசரிதையேமு தலநாற்றுறையோ, வேற்றமெய்யடியர்க்குதவுசாலோகமுத லநாற்பதங்கொலோவெம்மாற், சாற்றவுந்தகுமோவதன்மி சைச்சிகரந்தபனியவுலகின்மேற்றயங்கும். (கஉ)

மூன்றரணட்டார்முச்சுடர்விழியார்முப்பகையறுத்தமோ னியர்கள், பூன்றமதாகப்பொருந்துமூவயிக்கியம்புரிந்தருள் புண்ணியமூர்த்தி, மான்றனிநோக்கியாவுடைவல்லிமணாளற் குமகாசிவபுரமாத், தோன்றுசீராசைசூழ்ந்தெழுசோலையகழி தொன்மதினிலேயிதுவே. (கங)

வே று.

புன்னையின்னிழற்பூங்கொடியாவுடை
யன்னபாகத்தமர்சங்கரேசுரர்
மன்னிவாழவளர்ந்தசீராசையா
நன்னகர்த்திருவீதிநவிலுவாம். (கச)

மூவர்பாடன்முழக்கமுமொய்மலர்ப்
பாவையன்னவர்பாடலுமாடலுந்
தேவதேவன்விழவணிச்செல்வமு
மோவிலாதென்றுமோங்குமவ்வீதியே. (கரு)

செம்பொன்மாளிகைசெம்மணிமாளிகை
பம்புசந்திரகாந்தப்பன்மாளிகை

யம்பரத்தினராள்மணிமாளிகை
யிம்பருற்றதுபோலவிளங்குமே. (கசு)

மாடமீதுநிறுத்துமணிக்கொடி
யாடகப்புவிச்சென்றயிராவதத்
தோடைமாறுநலொண்சிந்தூரத்தின்மேற்
சாடியந்தத்திலகத்தைத்தள்ளுமே. (கஎ)

நீலமாளிகைமேனிலைநிற்பவர்
சாலநீலநிறம்பெறுதன்மைதற்
காலமேகத்தைக்கண்டுகளித்திடுங்
கோலமஞ்ஞையின்கூட்டத்தையொக்குமே. (கஅ)

பத்தொடாறுகலைப்பணித்திங்களை
யொத்தமாமுகத்தோவியமன்னவர்
முத்துமாளிகைமேவல்வெண்முண்டக
மெத்தைமேலுறுவெண்டிருமானுமே. (ககூ)

பதுமராகத்தரங்கினிற்பாவையர்
சதிமுறைப்படியாடுதறண்மதுப்
பொதிகடற்குட்பொடித்தவுவர்க்கொடி
யதிருந்தென்றலிலாடுதன்மானுமே. (உ0)

பொற்றொடிக்கரப்பூவையராடவர்
துற்றிவெம்முலைதோளொடுரோசலா
லற்றமாமணியாரமுந்தார்களு
முற்றுகுப்பையவ்வீதிமுழுக்கவே. (உக)

தோரணங்களுந்தூமலர்மாலையும்
பூரணந்தருபூம்புனற்கும்பமுஞ்
சீரணங்குசெறிநிலைத்தேர்களு
மூரடங்கவெவ்வீதியுமுண்டரோ. (உஉ)

தென்னைவாழைகமுகுசெழும்பலா
மன்னுவீதிமருங்கில்வளர்ந்துமேற்
பொன்னுலகிற்புகுந்துதருக்குலந்
தன்னொடேயிகல்செய்துதருக்குமே. (உங)

வேறு.

அதிர்முகிறவழுமாடத்தமைத்தசாளரமுன்னின்று
முதிரிளமுலையார்செவ்விமுகத்தினைநோக்குந்தோறுங்
கதிர்கலைகுறைவுறுமறகளங்கநீத்தமுதமூறும்
புதுமதிகோடிகோடிபொலிதல்போற்றோன்றுமன்றே. (உ௪)

பொன்னிறலமைத்தமேடைவிண்புகவதன்மேற்புக்குத்
துன்னியதோகையன்னார்க்கண்டுசூழ்ந்தருகினுற்ற
மின்னெலாமிடைக்கேயஞ்சும்வெண்பிறைநுதற்கேயஞ்சு
மன்னியமுகில்களெல்லாமலர்க்குழற்கஞ்சுமாதோ. (உ௫)

கொம்மைவெம்முலைகளாடப்பந்துகொண்டாடுவாரு
மம்மனைகளங்கைக்கொண்டாடல்கள்பயில்கின்றாருந்
தம்மனவிருப்பத்தோடுங்கொழுநரைத்தழுவிக்கூடி
யிம்மையிலிந்திரபோகமிதுவெனமகிழ்கின்றாரும். (உ௬)

கலவியைவளர்ப்பதற்குக்காரணமின்றியூடி
த்தலைவர்தம்மனத்துளாசைவளர்த்துத்தந்தாளில்வீழ்ந்து
பலமுறைவணங்கச்செய்துபரிவுடனவர்தம்மார்பின்
முலைமுகடழுந்தப்புல்லிமுயங்குதல்புரிகின்றாரும். (உ௭)

கிள்ளைகட்கனம்பாலூட்டிக்கிளர்மொழிகேட்கின்றாரும்
வெள்ளனமயில்கள்பூவைவிருப்பொடுவளர்க்கின்றாருங்
கள்ளமர்கரியகூந்தல்விறலியர்கனிந்துகூறுந்
தெள்ளமுதனையபாடல்செவிமடுத்துணர்கின்றாரும். (உ௮)

மணிகளாற்செய்தபாவையிரண்டினைமணக்கோலஞ்செய்
தணிபெறவருகில்வைத்துவதுவைகளாற்றுவாரும்
பணிகளான்முலையான்வல்லியிடைதளர்பான்மைநோக்கித்
தணிவில்தங்கலன்கழற்றித்தாதியர்க்கணிகின்றாரும். (உ௯)

கோட்டுமாமலரும்வாசிக்குளிர்தடமலரும்வல்லித்
தோட்டுமாமலரும்பூவிற்றோன்றியமலருங்கொய்து
வேட்டுணைக்கொழுநர்நல்கவிரைக்கருங்குழலிற்சூட்டி
யிட்டுபூண்முலையிற்றொய்யிலெழுதிப்பார்த்திறுமாப்பாரும்()

விசுமென்கரத்திலிட்டவண்டுகளாடவிம்மித்
துசொடுதொடர்ந்தகொங்கைத் துணைகண்மேலுந்தியாடப்
பாசிழைப்பணியில்லாடமரகதப்பதுமைபோல
வூசன்மீதேறியுள்ளத் துவகையோடாடுவாரும். (கக)

மாரனும்விரும்புகின்றவனப்புறுபுருடரெல்லா
மோர்தினங்களுந்தப்பாமலுவகைநல்விருந்தோடுண்டு
வீரகேசரிபோற்கூடிமென்மலர்மாலைசூடி
யீரமென்களபம்பூசியின்புறக்களிக்கின்றாரும். (கஉ)

சிவபுராணங்கள்கேட்டுச்சிந்தையுண்மகிழ்கின்றாருந்
தவமுறுபெரியோர்க்கன்புசரணிணைபணிகின்றாரு
மவநெறிபுலன்செல்லாமலத்துவிதங்களாய்ந்து
பவமறுஞானமுத்திப்பரம்பொருளுணர்கின்றாரும். (கங)

கதிருதயத்துக்கைந்துகன்னலினெழுந்துநன்னீர்
நதியிடைப்படிந்துபூதிகண்டிகைபுனைந்துநாவிற்
றுதிதருமெழுத்தஞ்சோதிப்புன்னையினீழற்சோதி
புதுமலர்ப்பாதம்போற்றித்தோத்திரம்புகல்கின்றாரும். (கச)

இத்தகைமடவார்மாந்தரெல்லியின்கடிகைமூன்று
பத்தைபுமினிதுபோக்கிப்பரிதிபோய்மறைந்தபின்னர்த்
தத்தைநல்மொழியாரோடுதண்மலரமளியெய்தி
முத்தணிதனங்கைக்கொண்டுமுயங்குதல்புரிகின்றாரும். ()

வேறு.

பொன்னுலுமவாவெழிலாற்போர்விழியாற்கனதனத்தாற்பொட்டான்மெட்டாற், கன்னார்கொண்டதுபோலக்கடினமனத்துறவரையுங்கலக்கஞ்செய்து, தன்னுசைதனைக்கொடுத்துத்தனைவிரும்பும்புருடர்களாசையைத்தான்வாங்கு, மின்னுராம்பரத்தையர்கள்விளங்குமணிவீதியணிவிளம்பலுற்றும் ()

ஆடகத்தாற்பன்மணியாலமைத்தமணிமாளிகைமுன்முகப்பிலன்னப், பேடுகுயின்மயில்கிளிபோனடந்திசைபாடிச்சாயல்காட்டிப்பேசி, நீடுவிழிக்கொடுங்கணையைக்காமுகர்மார்பகத்தெறியநெஞ்சமஞ்சித்,தேடிவந்துகாத்திருந்துசெல்வமெல்லாந்திறைகொடுக்கச்செய்புநீரார். (கஎ)

வந்தபுருடருக்கெல்லாம்வாய்மொழியாலுபசாரவணக்க ஞ்செய்து, சொந்தமனைவியர்போலத்தோற்றுவித்துநயப்பபடி த்தித்தொகையாய்ச்செம்பொன், றந்தபுருடரைமருவித்தரா தவர்தம்பொருள்கவர்தந்திரங்கள்காட்டி, யெந்தவிதத்திலும் பொருண்மேலிச்சைவைத்துத்தேடிநிதியீட்டுவார்கள். (௩௮)

விதிமுறையாய்மதனசாத்திரமறிந்தவாலிபராம்புருடர்மே விக், கதமுறுபோகத்தின்முயல்கருத்தையறிந்திதழ்கொடுத் துக்கனிவுகாட்டி, இதமுறுநற்புறத்தொழிலின்கலவியான் மோகவெறியெல்லாநீக்கி, மதமுறுமியானையைப்பாகர்வசப் படுத்திநெருங்குதல்போன்மருவிக்கொள்வார். (௩௯)

படுக்கைமனையலங்காரஞ்செய்துமரைமணிமிசைப்படுத்து ச்செம்பொ, னடுக்கனிகர்தனமிரண்டுமோடவர்தங்கைக்கொடு த்தங்கவரைக்கட்டி, யடுக்கையுரிந்தணைபொழுதினேகையுறு ம்போகத்தாலுயிருங்கூடக், கொடுக்கமனமுறும்படிசெய்மா யவித்தைதனக்கொருகொள்கலமேயன்னார். (௪0)

நாடகத்திலரம்பையுருவசியனையார்பாட்டிசைக்குநாரதா தி, மாடகநல்லியாழுடையோர்மயங்கும்வகைபுன்னைவனம ருங்கின்வைகு, மாடகப்பொற்சிலையுடையாராவுடையம்பி கைபுகழையன்பாய்ப்பாடிச், சூடகக்கையாலவர்க்கேதொண் டுசெய்துவழிபடுநற்றொழிலேபூண்பார். (௪௧)

திருவிருந்தயருதவயற்செந்நெல்லின்முளைகொணர்ந்துசி வனுக்கன்பாய்ப், பெருவிருந்துமுன்பொருவன்செய்ததுவே கடைப்பிடியாய்ப்பிடித்துத்தாயர், கருவிருந்துவரும்பொழு தேநல்லொழுக்கஞ்சைவநெறிகைக்கொண்டெய்தி, வருவிரு ந்துபுரந்துமகிழ்வேளாளர்பெருவீதிவளமைசொல்வாம். ()

மன்னவர்தங்கடமைநல்கலாணைவழிநிற்றன்மற்றுள்வினை தொடங்க, றன்னகத்திற்குற்றமின்மையூக்கமொழுக்கம்விரு ந்துதனைப்புரத்தல், பொன்முதற்கைக்கடன்கொடுத்தலொ ற்றுமைக்கொள்ளுதறெய்வம்போற்றலான, வின்னபத்துமி ன்னகர்வேளாளரென்னுங்குறையாமலியற்றுவார்கள். (௪௩)

இறந்தோரையிறவாமலிருந்திரந்தோரைப்பற்றேன்றின் றித்தானே,துறந்தோரையாச்சிரமமூன்றுபுரிதொல்லோரை. ப்புரந்துகூது, மறந்தோராயீசனணிமணிமுடிமேலிருந்தகங் கைகுலத்தின்வந்து, பிறந்தோராய்வாழுமவர்பெருமையொ ருநாவாலேபேசலாமோ. (சச)

மறுவறுநன் னூலோதல்விதிமுறையேமகவினையையாற் றன்மேலாந், தொறுவினத்தைப்புரத்தலுழல்வேளாண்மைகி திவிர்த்திசெய்து தூய்மை, யுறுதொழிலாம்வாணிகமேயுறுதி யாக்கொள்ளல்புகழோங்குமிக்த, வறுவகையாந்தொழில்புரி யுமெழில்வணிகர்வீதியின்பாடறைதல்செய்வாம். (சரு)

குன்றுக்குநிகரானநவமணியாலிழைத்தகூலத்திருந்து, க ன்றுக்குநலந்தருகைக்கன்னியினுக்கடுத்த விராசியைக்கைக் கொண்டு, என்றுக்குநிகரானபொற்பணியும்பலபொருளுமி சைவாய்வாங்கி, யொன்றுக்குப்பதின்மடங்காயிலாபமுறும் வாணிகமேபுளுற்றுவார்கள். (சகூ)

நடுப்பேசிவழக்குரைப்பார்மறந்தேனுஞ்சொல்வாய்மைம மூவாரொன்றை, வடுப்பேசார்தம்மரபின்மருங்கைவிடார்செ ய்தநன்றிமறக்கமாட்டார், கடுப்பானமொழிபகரார்நல்விஷ யத்திற்கோடிகனகமேனுங், கொடுப்பார்கள்குற்றம்வருங்கா ரியத்தைத்தங்கருத்திற்குறியாரன்றே. (சஎ)

துன்னுகிளைமறையோதஞேல்விதியேயுபர்வேள்வித்தொ ழில்கள்செய்தல்,பொன்னிதியங்கொடுத்தலிந்தப்பூதலத்தை ப்புயமீதுவைத்துக்காத்தன், மன்னுபடைத்தொழில்பயிறல் போர்புரிதலெனவாறுவகைத்தொழிற்கு, முன்னவராய்முன் னவருக்கடுத்தகுலமன்னர்முதுவீதிசொல்வாம். (சஅ)

வேறு.

மதிமுகடுரோசுமாடமாளிகைமணிமுகப்பும்
கதிர்தொடுகோபுரங்கள்கனமகமேருநேர
விதியறிசிற்பர்செய்தமேனிலைச்சிறப்புநோக்கிற்
புதியதோர்தெய்வலோகம்புவனத்திற்றோன்றல்போலும். ()

துன்னரியேறுபோலச்சுடர்முடிவேந்தர்மைந்தர்
மின்னும்வாள்பலகைக்கைக்கொண்டெதிரெதிர்வீசிநின்று
தன்னுடற்காப்புசெய்தேயெதிர்வாள்வெட்டுத்தாங்கிப்
பின்னவர்தம்மேல்வெட்டிப்பெயர்ந்துநின்றார்க்கின்றாரும். ()

முரசதிர்வீதிதோறுநிரைநிரைமுகிறோயெட்டு
வரையெனப்பருத்துநீண்டுவாவுமைங்கதியினாலே
விரைசுவெம்பரிகள்பூட்டிமிளிர்மணிக்கொடிகள்கட்டி
யிரதமூர்ந்திந்திரன்சேயெனப்பொலிந்தெய்துவாரும். (௫௧)

உன்னதமுளமேழொன்பானீளமதுடைத்தாயொன்பான்
றன்னுறுப்பதனாற்போரிற்சாடியித்தரையின்மீதின்
மன்னுமேழுறுப்புத்தோயுமத்தமாநடாத்தியும்பர்
பொன்னுலகரசனென்னப்புகழ்தரவருகின்றாரும். (௫௨)

இரவிதனொற்றையாழித்தேரினையீர்ந்துச்செல்லும்
மரகதப்புரவிக்கெட்டுமடங்குவல்வேகம்வாய்த்த
குரகதமூர்ந்துசாரிவலமிடங்கொண்டுசுற்றிப்
பரதநாடகத்திலாட்டிப்பரித்தொழில்பயில்கின்றாரும். (௫௩)

திருகுவெங்கோட்டுச்செந்தீயனையசெம்மயிர்க்கடாக்கள்
பொருதிடப்பொருத்திவென்றிகொண்டதைப்புகழ்கின்றாரு
விரிசிறையடித்துக்கூவும்வாரணவெங்கான்முள்ளாற் [ம்
குருதிகொப்பளிக்கக்குத்துங்கொடுஞ்சமர்பார்க்கின்றாரும்()

இருமலைகோடுண்டாகியெதிரெதிர்மலைந்தாலென்னக்
கருமுகில்போலுரற்றிக்கண்களிற்கனல்கள்சிந்தப்
பெருமதமூன்றுந்தத்தப்பெரும்பனைக்கரம்பிணைத்துப்
பொருகரிப்போரியற்றிப்புயங்கொட்டியார்க்கின்றாரும். ()

தேர்நிரைநாவாயாகச்செழுங்கரிக்குலநீருண்ணுங்
கார்நிரையாகக்காலாள்கதித்தெழுமீன்களாக
வேர்தருபுரவிக்கூட்டமெற்றுவெண்டிரைகளாகப்
பார்புகழரசர்வீதிபடர்பெருங்கடலையொத்த. (௫௬)

வேறு.

மறையோதலோதுவித்தன்மகம்புரிதல்புரிவித்தல்வந்தே
ற்போர்க்கு, நிறையாகநிதிகொடுத்தலேற்றலிந்தத்தொழிலா

றுநெறியிற்கொண்டு, முறையாமுத்தழலோம்பிநாடோறுமூ வர்முதற்றேவரியார்க்கும்,குறையாமலவிர்ப்பாகங்கொடுக்கு மறையோர்வீதிகூறுகிறப்பாம். (௫௭)

ஆதிசைவராய்மறையாகமமனைத்துந்தேர்ந்தபிடேகங்களா கிப், பூதியணிந்தைந்தெழுத்தைப்பொருளெனக்கொண்டரா ன்பூசைத்தொழிலேபூண்டோர், சோதிசிவசங்கரராவுடைதி ருவாலயத்தின்முன்னர்த்தோன்றுகின்ற, வீதியினிற்சிவம றையோர்பொற்கிரகவிரைவிரையாய்விளங்குந்தானே. (௫௮)

வந்திரவியெழும்பொழுதுமாத்தியானமாலையெனவகுத்த மூன்று, சந்தியினுங்காயத்திரிதனையுரைத்துச்சந்திசெயுந்தவ த்தோராகி, யிந்துவணிசடைப்பெருமாற்குரியவேள்விக்கிரி யையியற்றியென்று, மந்தணர்கள்சிறந்திருப்பாரருமறையி ன்முழக்கமருதந்தவீதி. (௫௯)

பொய்புகலாவொருமொழியாரிருபிறப்பார்முக்குற்றம் போக்கிநான்கு,தெய்வமறையுணர்ந்தைந்துபுலனடக்கியாறு சமயங்கடேர்ந்து, செய்வார்த்தங்கெழுநாவானிளெரியுண்ணு ம்படிநன்னியதிசெய்து, வையகத்திலுள்ளோர்கள்போற்றுபூ சுரராகிவாழ்வாரென்றும். (௬0)

மறையிடத்தினுதாத்தமனுதாத்தமுடன்மறையோதியங்க மாறி, னிறையுடைத்தாமுன்ஞென்றுமங்கோதிப்பின்னைந்து நேயக்கல்வித், துறையிடத்திலெடுத்தோதியுபசுருதிபுராண நூற்றேன்றயாரு, முறையிடத்தில்விரித்தோதிமாணவகற்கப் பயனையுறுத்துவார்கள். (௬௧)

தந்திரவுத்திகளெண்ணான்குந்தேர்ந்துமதமேழுந்தழுவிச் சான்றோர், முந்தவுரைத்திடுமெட்டப்பிரமாணங்களுமுறையா யறிந்துமுன்னர், வந்தெதிர்த்துவாதமிடுந்தார்க்கீகர்தமைம றுத்துவாதமிட்டுச்,சொந்தமாஞ்சைவநிலைசிறுத்தியேபிறமத த்தைத்தூளாச்செய்வார். (௬உ)

இற்றுறந்திதயப்பற்றினைவிடுத்திங்கினியோர்பற்றிலையெ னப்பொருளின், பற்றினைப்பற்றிப்பாவனைநீக்கிப்பாவனுதீத

ராய்ப்பரிதி, யுற்றிடுகுணம்போலியாவைவுஞ்சமமாயுளத்தி
டையுன்னியொப்பில்லா, நற்றுறவடைந்தமகான்களால்வசி
க்கநண்ணியமடங்களுமநேகம். (௬௩)

வேறு.

ஆறுகட்டிகண்டிகைவெண்ணீறணிந்தபிடேகப்
பேறுகட்டியைந்தெழுத்துணர்பெரியராய்நுதலி
னீறுகட்டியசிமலனைநினைத்துநெஞ்சகத்தில்
வீறுகட்டியமெய்யறிவுடையராய்விளங்கி. (௬௪)

சைவவாகமஞ்சைவசாத்திரம்பதினான்கு
மெய்யதாம்பசுபதியொடுபாசமும்விசாரித்
துய்யநன்கடியவர்க்குபதேசங்களுரைக்கு
மய்யராஞ்சைவாசாரியர்மடங்களுமநேகம். (௬௫)

வேறு.

தெரிவரும்பெருமைச்சங்கரேசுரர்கோவிலின்றென்மேற்
காகியதிக்கி, னரியரவடிவாமரனுருக்காண்பானம்மைகோம
திபுளத்தன்பாய்ப், பெரியநற்றவஞ்செய்தவசுமண்டபமொ
ன்றுளததன்பெருமையைக்கல்விக்,குரியநாமகளுமெடுத்தெ
டுத்தனேகயுகங்களினுரைப்பினுமுடியா. (௬௬)

அத்திவாரங்கணீலமாமணியாலமைத்ததன்மேற்படிகத்
தான், மெத்தியதளங்கள்பொருத்திப்பின்பதுமராகத்தான்
மிளிர்சுவரேற்றி, மத்தியிற்பவளக்காளிறைநாட்டிவயிரநற்
போதிகைமீதி, லுத்திரம்பச்சையாற்பதித்துயர்வாயொளிர்வ
யிடூயக்கையோங்க. (௬௭)

இசைத்துமேன்முகடுசேர்த்துமாற்றுயர்ந்தவிரசதத்தகட்
டினால்வேய்ந்தங், கசைத்துவானிரவிமதியிரதத்தையடர்ம
ணித்தூபிமீதமைத்துத், திசைக்கெல்லாமழகுசெயுமிதன்க
வினைத்தெரிந்திடவந்தவானவர்க, ணசைக்குமேலாகியவர்ம
னத்தினையுங்கவருநல்விசித்திரமாக. (௬௮)

பொறிகளங்கமைத்துவைத்தனர்கண்டோர்பொறிபுலனி
யாவுமப்பொறியாற், பறிகொளவிடுத்துத்தாங்களப்பொறி
யின்படிவமாயசைவறநிற்பின், மறிகொளுங்கரத்தார்வடிவி

னோக்கிவாமிகோமதிதிருநாட்டக், குறிதவாதிருந்துதவஞ்
செயுங்கோலங்காண்பவர்பெருமைகூறரிதால். (சுகூ)

இத்தகையுடையதவசுமண்டபந்தானியற்றியவேந்தனியா
ரென்னின், முத்தமிழ்ச்சங்கமூன்றுடனென்காய்முறைபெறவ
ளர்த்துமூதுலகில், வைத்திடுமூற்றுமலைக்கரசுரிமைமன்னவ
ன்மருதப்பவள்ளல், பத்தியாற்செய்திங்கேழிரண்டுலரும்பர
ய்பினன்றன்புகழ்ப்பரப்பே. (எ0)

வே று.

மேருவென்னலாமுதனிலைக்கோபுரமிளிர்பொன்
சார்விமானங்களிரண்டும்வெண்கயிலைதண்மதிதோய்
காருலாவிமயாசலமென்னலாங்கடாவு
மேருயர்ந்தவனலயத்தெழில்சொலவெளிதோ. (எக)

மண்டபங்களுந்திருமதினிலையுமாநடனங்
கொண்டபொற்சபைமற்றுமிவ்வுலகினிற்குடிவர்
தண்டர்தச்சனுலமைத்ததாமன்றெனில்லர்ந்த
புண்டரீகத்தன்சிருட்டியாமியாரிதுபுகல்வார். (எஉ)

வே று.

பூமியேமுதலாமெவ்வுலகோர்க்கும்போகமும்வீடுநல்குவ
திவ், வாமிகோமதியோர்பாகனேயென்றுவான்மொழிசாற்று
தல்போல,வேமமால்வரைபோலுயர்ந்தகோபுரத்திலியற்றிய
மணியிராப்பகலாத், தாமதமின்றிக்கடிகைகடோறுகணக
ணவெனத்தனியொலிக்கும். (எந)

வே று.

ஆறுகாலமுமருச்சனைநிவேதனமடியார்
கூறுபாடல்கள்கணிகையராடல்கள்கோல
நீறுபூசியதொண்டர்தங்கூட்டங்கணினைத்த
பேறுதந்திடுஞ்சன்னிதிதனிலென்றும்பெயரா. (எச)

ஐந்துவாத்தியமுழக்கமுமரகரமுழக்கு
நந்திபின்னின்றுநாவமுதூறநாற்றமிழான்
முந்துமூவர்சொல்பாடல்களோதிடுமுழக்குஞ்
சந்திராதித்தர்மண்டலந்தாண்டியேமுழங்கும். (எரு)

சித்தர்கூட்டமுந்தேவர்கள்கூட்டமுந்தேர்ந்த
முத்தர்கூட்டமுமுனிவரர்கூட்டமுமுதிர்ந்த
பத்தர்கூட்டமும்பாவலர்கூட்டமும்பரவ
வத்தர்சங்கரரம்மையோடருள்புரிந்திருப்பார். (எசா)

வேறு.

புன்னாகவனமுனிவர்போற்றநடம்புரிபவரைப்புகழ்தல்
போலென், புன்னாகவனம்புரிதல்பொருளெனக்கொண்டார்
வெண்ணம்புயத்தின்மாதைப், புன்னாகவனந்தேடுங்கடவுளர்
க்குநிழறந்துபூத்துக்காய்த்த, புன்னாகவனப்பெருமைபுகலவ
ரவாயிரநாவும்போதாதே. (எஎ)

அன்பரகங்குவிவதுபோன்முகையரும்பியவர்முகம்போல
லர்ந்தெந்நாளு, மின்பமுறவவருளத்திற்சிவஞானமூறுதல்
போலெழிற்றேனூறி, மன்பதைக்கெல்லாந்துன்பவினைநீக்
கிப்பிறவிவெம்மைமாற்றுதற்குத், தன்பதத்தினிழறருவார்த
மக்குநிழறந்துபுகடழைக்கும்புன்னை. (எஅ)

மூலமேமறையாகமுளைத்தெழுந்தாறங்கமதாய்முதிர்ந்து
மேற்சென், றூலுமடர்சினையாகமாதிபுராணங்கலைக்கியானங்
களாகிச், சூலமெரிமழுமானுந்துணைக்கரத்திற்கொண்டபரா
ஞ்சோதிபச்சைக், கோலமயிலாவுடையம்பிகைக்குமிடங்
கொடுத்துமேற்குலாவும்புன்னை. (எகூ)

சங்கரராவுடையிருக்கவமைத்தருளும்விமானமெனச்சங்க
ரேச, ரிங்கிதமாயணியரவப்பணியமைத்தவணிமணிப்பெட்ட
கமேயென்ன, வங்கவினைப்பிணிதீர்க்கவமுதமைத்தகடமெ
ன்னவமைந்தெந்நாளு, மங்களமாவடிவுபெற்றவன்மீகப்பெ
ருமைபெரிதாகுமாதோ. (அ0)

பச்சைநிறமொருபுறமும்பவளநிறமொருபுறமும்பணியுந்
தொண்டர்க், கிச்சைதருகேளத்துவமுமெழிலுருத்திராக்க
மும்பூணடினிமையாக, நச்சரவுசங்கபத்மர்தவத்தினுக்குவெ
ளிப்படையாய்நாமரூப, மச்சுதனுமரனுமொன்றுஞ்சங்கரநா
ராயணரேயாதிமூர்த்தி. (அக)

நடுக்குமுடற்பிணிதீரநன்மருந்துபுற்றுமருந்தாகநாளுங்,
கொடுக்கும்வயித்தியர்பிறவிப்பெரும்பிணியை யருண்மருந்

தாற்கொன்றெப்தாமற், றடுக்கும்வயித்தியராளசங்கரர்கோ
மதிவளர்சிராசைத்தன்மை, அடுக்குமலரயன்முனிவரமரா
லும்புகழுவடங்காதன்றே. (அஉ)

திருநகர்ச்சருக்க முற்றிற்று.

ஆ செய்யுள் - கசுசு.

# புராணவரலாறு.

இருநிலத்துயர்ந்தநைமிசாரணியத்தீட்டுநற்றவத்தினர்க்
காண்பான், பரிவுறுதவத்துச்சூதமாமுனிவன்பழுத்தநல்லரு
ளினேடெய்த, விரைமலர்தூவியுயர்தவிசளித்துவிருப்புடன்
முகிழ்த்தகையினராய்க், கரையழியின்பக்கடலினுள்ளமூழ்தி
க்கருதியொன்றுரைக்கலுற்றனரால். (க)

நறைகமழிதழித்தொடைசடைமுடித்தநாதன்வாழ்பதிக
ளின்வீறு, குறையறவெமக்குப்பண்டைநாளுரைத்தாய்குரு
மணிச்சூட்டராவசைத்த, கறைமிடற்றிறையும்பசுந்துளாய
லங்கற்கண்ணனுமோருருத்தாங்கி, புறைதருபதியின்வீறெம
க்கினியுரைத்திடவேண்டுமென்றுரைத்தார். (உ)

முனிவரேநீங்கள்வினவியதலத்தின்மகிமையுந்தீர்த்தமூர்த்
தியுமப், பணிவருஞ்சடையான்மாலுமீசனுமாய்ப்பகருருத்தா
ங்கியபண்பும், கனிதருமன்பனுக்கிரவமுதிவழிபடுகதையுந்த
க்கணியாம், வனிதைசெய்தவமும்வீரசேனப்பேர்மன்னவன்
பிணிதவிர்ந்ததுவும். (ங)

சயந்தன்மாபாவந்தீர்த்ததுங்கானவேடுவன்கதியுறுந்தகை
யுங், கயந்தனிற்பசுவைமாய்த்தகன்மாடன்காணரும்வீடுபெ
ற்றதுவு, முயர்ந்தபுன்னைகவனத்தினன்மகத்துவமெனவுபர்
வியாசன்முன்னெனக்குப், பயன்றருபவுடியோத்தரபுராணத்
திற்பகர்ந்தவாறேபகர்குவனால். (ச)

புராணவரலாறு முற்றிற்று.

ஆ செய்யுள் - களo.

# தலவிசேடச்சருக்கம்.

இப்புவியிற்றலந்தீர்த்தமூர்த்தியோரிடத்திலிகபரத்தைந
ல்கு, மொப்பிறலமெத்தலத்துமில்லையிந்தத்தலத்துளதுங்க
ட்குளன்பாய்ச், செப்புவலியான்சித்தமொருப்படநீவிர்கே
ண்மினெனச்செங்கைகூப்பி, யப்பணியுஞ்செஞ்சடையார்ச
ங்கரேசுரர்த்தொழுதங்கறைவதானன். (௧)

அத்தலத்தினிருந்துசரியையையியற்றிலரனுலகையடை
குவார்க, ளத்தலத்திலிருந்துகிரியையையியற்றிலரன்பக்க
லணுகுவார்க, ளத்தலத்திலிருந்தியோகம்புரியிற்சிவரூபமா
குவார்க, ளத்தலத்திலிருந்துமெய்ஞ்ஞானந்தெரிவோர்சாயு
ச்சியமடைகுவாரே. (௨)

புலையரோடுறவாகிப்புன்னெறியானன்னெறியைப்போக்
கினோருங், கொலையரேயானோருஞ்சீராசையாமிதனிற்கூடின
ல்ல, நிலையரேயாகியுயர்நெறியொழுக்கமாசாரநிலைத்துக்கல்
வித், தலையரேயாவார்களிப்பிறப்பிலினிப்பிறவாத்தன்மை
யாவார். (௩)

முந்தொழிலுநடத்துசங்கரேசுரர்வாழ்தலமகிமைமுன்னு
ராகி, யெத்தொழிலின்முயற்சியைக்கொண்டெய்தினோரேனு
மங்கோரிரவிருந்தாற், சித்தமலினந்தீர்ந்துசிவனடியைச்சே
விக்குஞ்செல்வராகிப், பத்தரினும்பத்தராய்ப்பசுபதிபாசத்தி
னுண்மைப்பயனைத்தேர்வார். (௪)

ஒருதினமங்குறைபவர்களும்மையிற்செய்பவந்தீர்வருண்
மையாக, விருதினமங்குறைபவர்களிம்மையிற்செய்பவந்தீர்வ
ரீசன்பொற்றுள், கருதியேமூன்றுதினங்காத்திருப்போர்மறு
மைவினைகடந்துநிற்பார், சுருதிமொழியிதுவாமென்றுறுதி
கொள்வோர்சுவர்க்கபதிநேதாய்குவாரே. (௫)

ஆதிவாரத்திலிந்தத்தலத்திலிருந்தரன்விழியாயமர்ந்திருக்
குஞ், சோதியிரவியைநினைந்துநோன்பியற்றிற்கண்ணோவு

தொலைந்துவெப்பாற், காதுகொடும்பிணிதவிர்ந்துகதிரொளி
போலெழில்விளங்கிக்காயமீக்கும், போதுகதிருலகினுற்று
வாழ்ந்துபின்புபரகதியிற்பொருந்துவாரே. (சு)

மதிவாரத்தரன்சடையிற்பிறைபாகிவிழியினிறைமதியமா
கித், துதிவானவருக்கமுதமூட்டுவிக்குந்தண்சுடரோற்செழு
முதுபோற்றிப், பதிவாகவித்தலத்தினேன்பெயற்றும்பெரி
யோரப்பதத்தினன்ணிக்,கதிவாய்த்துக்கணம்பரவச்சிவலோ
கமிருப்பிடமாய்க்கைக்கொள்வாரே. (எ)

மங்களவாரத்திலித்தலத்திருந்துநோன்பியற்றில்வக்கி
ரனுலே, பொங்குபிணிதோஷமும்போய்ப்பூமனருளாற்சிவ
போகந்துய்ப்பார்க,டிங்களருள்சேய்புதனுட்சிந்தித்துநோன்
பியற்றிற்சிறந்தகல்வி, தங்குபுதனுலகடைந்துசம்புதிருவுல
கமதிற்சார்குவாரே. (அ)

குருதினந்திலித்தலத்திற்குருவைகினைந்தேபத்திகொண்
டுநோற்போர், கருதுமவனுலகடைந்துகடவுளுறைசிவபதந்
திற்கலந்துவாழ்வா, ரொருதினமாவதுசுக்கிரவாரவிரதம்புரி
ந்தோரும்பர்செல்வம், பெருகுமவனுலகடைந்துபின்ஞகன்
றன்றிருவடிப்பேறெய்துவார்கள். (கூ)

வேறு.

எவ்வமதனைத்துந்தீரவிருஞ்சனிதன்னையுள்கிச்
சைவநற்றலமாஞ்சீராசைப்பதிதன்னினோற்போ
ரவ்வியமகலவன்னுலகிடையமர்ந்துபின்னர்க்
கைவருநெல்லியென்னக்கடவுடன்கழலைச்சார்வார். (க0)

பலமொருவருடங்காய்ந்தசருகொருவருடம்பற்றில்
சலமொருவருடங்காற்றுத்தாஞெருவருடமுண்டு
நிலையிலாவுடம்பைவாட்டிநீள்தவஞ்செய்வோர்பேறிந்
நலமுறுதலத்தினோர்போதுண்டிநீத்தவரைநண்ணும். (கக)

வேறொருதலத்தினூறுபரிமகம்வியந்துசெய்த
பேறொருபரிமகத்தாலித்தலத்தெய்துபேறு
மீறிலாவாசபேயம்பவுண்டரமிராசசூய
நூறுசெய்பலன்களக்கினிட்டோமமோர்நொடியினல்கும்.()

தந்தையைந்தாயைபுன்மைச்சற்குருபரனைவைது
நிந்தைசெய்துடித்துள்ளோருநீயொருதஞ்சமென்று
வந்தவர்க்காவாதாரும்வழியவர்க்குதவாதாரு
மிந்தநற்பதியினெய்திவிருங்கதியடைவாரன்றே. (க௩)

பூதலந்தன்னிலுள்ளபுண்ணியதலங்கட்கெல்லா
மேதகுதலமீதாகுமியாதினாலென்னில்வேத
நாதனைபுற்றுமண்ணானன்மருந்தாகல்கிப்
பாதகநோய்க்ணீக்கிப்பரிந்துகாத்தருள்வதாலே. (க௪)

கங்கையைப்புனைந்தவீசன்கணங்களினதிகநந்தி
மங்கையர்க்கதிகங்கற்புவாய்த்திடுமடநல்லார்கள்
செங்கண்வாளரவிற்சேடனதிகமாஞ்சிவதலத்திற்
சங்கரனுறைபுஞ்சீராசைப்பதியதிகந்தானே. (க௫)

மணிகளென்பதிற்சிரேட்டம்வயிரமாமணியேயாகு
மணிகலைநூல்கடம்மிலந்நுவிதஞ்சிரேட்டங்
கணிதநூல்சொலுமிராசிதனிற்கனசிரேட்டஞ்சிங்கம்
பிணிதவிர்தலங்கடம்மிற்பெருஞ்சிரேட்டஞ்சீராசை. (க௬)

வானவர்தனிற்சிரேட்டம்வயிரவாட்படைவலாரி
சேரனைமேகங்கடம்மிற்சொன்னமேகஞ்சிரேட்டங்
கானமாக்களிற்சிரேட்டங்கமழுங்கத்தூரியாகு
மூனமிறலத்திற்சீராசைப்பதியுயர்சிரேட்டம். (க௭)

பத்திரந்தனிற்சிரேட்டம்பலந்தருவில்வமாகு
மந்திரந்தனிற்சிரேட்டம்பாசுபதாத்திரமதாகுஞ்
சத்திகடனிற்சிரேட்டந்தையல்கோமதித்தாயாகுஞ்
சித்திரத்தலங்கடம்மிற்சிரேட்டஞ்சீராசையாமே. (க௮)

மருக்கமழ்மலர்கடம்மில்வனசமாமலர்சிரேட்டங்
குருக்களிற்றேவர்போற்றுங்குலகுருப்பொன்சிரேட்ட
முருக்கியபொன்னிற்சாம்பூநதமிதியுயர்சிரேட்டந்
திருக்கிளர்தலத்திற்சீராசைப்பதிசிரேட்டமாமே. (க௯)

மாதவமுனிவர்தம்மின்மலையமாமுனிசிரேட்டந்
தாதையைப்புரக்குஞ்சேயிற்றகுபகீரதன்சிரேட்டங்

காதைகடனிற்சிரேட்டங்கடவுடன்காதைபாகு
மேதகுதலசிரேட்டமிருவராராசைபாமே. (௨0)

வேறு.

முன்னைவினையிப்பிறப்பின்மோதுபிணிவினையனைத்துமு
டுகியோட்டும், பின்னைவினைவாராமற்பிரமனைமூத்தையுமழி
க்கும்பெருமையுள்ள, தின்னதலமகிமைதனையாவரேயெடுத்
துரைப்பாரிதனினும், புன்னைவனஞ்சிராசைவராசைபுர
மெனவும்புகல்வர்மேலோர். (௨௧)

புண்ணியங்களொன்பதுடனுபசாரஞ்செய்துசிவனடியார்
ப்போற்றிப், பண்ணியம்பாலடிசிலன்பாயித்தலத்திலொரு
போதுபடைத்தபேர்க, ளெண்ணியநூறுயிரம்பேர்சிவனடி
யார்க்கயற்றலத்திலிடுபேறெய்திக், கண்ணுதறன்கயிலையினி
றகணங்களெல்லாம்பரவயலங்களித்துவாழ்வார். (௨௨)

இந்தலத்தின்மறையவருக்கொருசுரபியன்பினுலீய்ந்தபே
ர்க, ளுத்தமவான்சுரபிபணிகேட்பவானவர்க்கிறையாயுற்று
வாழ்வார், முத்தநகைகநுங்கூந்தற்கன்னிகாதானமொன்று
முடித்தபேர்க, ணித்தமுமாயிரங்கன்னியயற்பதியினுதவுபல
னேர்குவாரே. (௨௩)

பூதியுருத்திராக்கமன்பாய்ப்புனைந்துசிவனடியிணையைப்
போற்றுதாருஞ், சாதியினிற்கீழானசண்டாளசன்மமாய்ச்ச
னித்தபேரும், பாதையினிற்போம்பொழுதுசிராசைப்பதியி
னிற்கால்பதித்திட்டாரேல், மேதகுசன்மத்திலுற்றுவினைபெ
லாந்தீர்ந்துமெய்ஞ்ஞானிகளாவாரே. (௨௪)

தூரதேசத்திருந்தித்தலமகிமைகேட்போருந்தொலைவின்
மூப்பாற், பாரதனிடைந்தவரச்செயலிலராய்மனதினினைப
த்தியோரு, மோர்தருநல்விழியிலராய்த்தெரிசித்தோமிலையெ
ன்னவெண்ணுவோருஞ், சீருயருங்கதிசேர்வாரெனிற்சிராசை
ப்பெருமைசெப்பலாமோ. (௨௫)

நீதுதவிரித்தலத்திற்சிவனடியார்திருவடிக்குச்சேமஞ்செ
ய்பும், பாதுகையும்வெயிற்குடையும்பணிக்காடைகோவண
மும்பற்றிச்செல்ல, வாதரவாங்கைத்தீண்டிவிசிறிமுதற்பல

தானமளித்தபேர்கள், பூதகணநாதர்விமானஞ்சுமப்பச்சிவ லோகம்புகுதுவாரே. (உ௭)

எவ்வகையதவப்பேறுமெவ்வகையதானத்தாலெய்தும்பேறு, மெவ்வகையமகப்பேறுமெவ்வகைமெய் நூல்வழித்தாயெய்தும்பேறு, மெவ்வகையதலந்தீர்த்தமூர்த்தியினுலியாவருக்குமெய்துகின்ற, வெவ்வகையபெரும்பேறுமித்தலமேகொடுக்குமெனவிசைக்குமெய்நூல். (உ௭)

வே று.

குன்றுபோலுந்தவத்தர்கள்கோளெலாம்
வென்றரூதன்விரைச்சரண்போற்றியே
யின்றுநீசொறலத்தின்விசேடமே
நன்றுநன்றினித்தீர்த்தநவில்கென்றார். (உ௮)

கார்த்திகேயனைத்தந்தகடவுளைப்
பூர்த்தியாயுளப்போதிலிருத்தியே
பார்த்தபேர்கள்பவப்பிணிநீத்திடுந்
தீர்த்தமான்மியஞ்செப்பத்தொடங்கினன். (உ௯)

தலவிசேடச்சருக்கமுற்றிற்று.

ஆ செய்யுள் - ௧௬௬.



# தீர்த்தவிசேடச்சருக்கம்.



ஆகமவிதங்களுமனேகமுறைதேடுந்
தோகையொருபங்கிலுறைசோமசடிலேசர்
வாகுபெறுமாலயமுனேயிடமதாக
நாகசுனையென்றுநவிறீர்த்தமதுநண்ணும். (௧)

மாகனகவில்லியைநல்வந்தனைசெய்தற்காய்
வேகலிடநாகரிருவோரும்வியனுக
வோகையொடுதொட்டதிலுடன்படிதலாலே
நாகசுனையென்றுபெயர்நண்ணினதுமாதோ. (௨)

மோகமொடுசிகைமுலையிற்கொடியதாகி
வேகமொடுகொத்திடுசயந்தன்வினைவீட
வோகையுடனுடமுனமுள்ளவுருநல்கு
நாகசுனையின்பெருமைநாமறையவற்றே. (௫)

உலவையுணுநாகமதனுலுறுவதாலே
சுலவுதிரைதோய்தடமதிற்சுழல்வதான
நிலைமைபெறுஞெண்டுகமடந்தவளைநீண்மீன்
சலசரமதென்பதுதவிர்ந்திடுமொநாளும். (௬)

மெய்ச்சுரவியாதிகளுமெய்யினிலுறுப்பை
யச்சழிவுசெய்ததொழுநோயகல்வயிற்றைப்
பிச்செறிதல்போலவலிசெய்பெரியகுன்ம
நச்சரவவாவியிடைநண்ணுமுனமோடும். (௭)

போகிகளியிற்றியபுகழ்ச்சியதனாலே
போகியுலகத்தினுறுபொற்பணிகளாடும்
போகிதடமேன்மைபுகல்வோர்களயிராணி
போகியெனவேமகிழ்வுபூண்டினிதிருப்பார். (௮)

நடுவனையுதைத்தசிவனுகசுனையென்னு
மடுவிடைகுளித்துவளர்புற்றினன்மருந்தைக்
கடுகிடையருந்தினவர்காலனின்வணங்கிக்
கொடுவிடமனைத்தும்விடைகொண்டுகுடிபோகும். (௯)

அற்பவுடல்பொய்யெனவறிந்துவரராசைப்
பொற்பதியுறைந்துதவபூடணர்களாகிச்
சற்பதடமாடினவர்தம்பவமகன்று
கற்பவரையீசனிருகழல்பிரிகிலாரே. (௧௦)

விரகவிடரேனும்வெகுபாவயர்களேனு
மரகரமுழக்கமுடனைம்புலனடக்கிக்
கரகமலமுச்சியுறவேகதியையுன்னி
புரகசுனையாடினவரும்பரெனவுய்வார். (௧௧)

பொன்னகம்வளைத்தவுயர்புன்னைவனநாதர்
தன்னகமதிற்குடியுறத்தடமதாடச்

சொன்னகலைநன்னெறியுணர்ந்துதுகடீரப்
பன்னகதடம்படிகுவோர்பரமனுவார். (௧0)

புட்செவியகாதினருள்போதசிவஞானர்
விட்செவியதிங்களணிவேணியர்நகர்க்குட்
கட்செவியகழ்ந்ததடமூழ்கினர்கருத்தி
னுட்செவியராகியுயர்வீடுபெறுவார்கள். (௧௧)

வேறு.

நாகத்தின்பொருட்டாய்வந்தநற்றடமகிமையுன்னூர்
தாகத்தின்பொருட்டாயேனுந்தண்புனலுட்கொண்டாரேற்
றேகத்தின்பொருட்டாய்வந்ததீவினையனைத்துநீக்கி
யேகத்தின்பொருடாமோர்ந்திங்கிறப்பிலாமுத்திசேர்வார். ()

முப்புவிதன்னிலுள்ளமுதியதீர்த்தங்கடம்மிற்
செப்புதற்குவமையில்லாத்திவ்வியநாகதீர்த்த
மெய்ப்படிற்புறமுமுள்ளுந்தூயராய்வெம்பிறப்பாற்
கைப்புறுவினையுநீங்கிக்கடவுடன்கழலைச்சேர்வார். (௧௩)

அந்தமாதீர்த்தந்தன்னிலாடுதற்கருகரல்லா
நிந்தனைச்சாதியானோர்நெஞ்சினினினைக்கிற்பார்க்கி
லுந்திவீழ்ந்தாடுவோராலுறுபுனலுடன்மேல்வீசிற்
பிந்தியபிறப்பின்மேலாம்பிறப்பினிற்பிறப்பாரன்றே. (௧௪)

நுண்ணியவறிவின்ஞானநூலறிவதிகமாகு
மண்ணியபொருள்கட்கெல்லாமறப்பொருளதிகமாகும்
பண்ணியபாவமெல்லாம்பரிதிமுன்னிருள்போனீக்கும்
புண்ணியதீர்த்தந்தம்மினதிகமாம்புயங்கதீர்த்தம். (௧௫)

சத்தமாபுரியின்மேலாந்தண்டமிழ்மதுரைமூதூர்
சத்தமாவுலகின்மேலாஞ்சத்தியவுலகமாகுஞ்
சத்தமாகடலின்மேலாந்தண்பயோததியேயாகுஞ்
சத்தமாநதியின்மேலாந்தடஞ்சுனைநாகதீர்த்தம். (௧௬)

அயனபுண்ணியகாலத்தினந்தமாதடத்தின்மூழ்கிக்
கயல்விழியுமையைப்பங்கக்கடவுள்சங்கரரைப்போற்றின்

வியனுறுதீர்த்தமெல்லாமாடியமெய்ப்பேறெய்தி
புயர்சிவலோகத்தெய்தியொழிவிலாப்போகந்துய்ப்பார். ()

மேடநன்மதிப்பிறப்பின்மேவியத்தடந்தின் மூழ்கி
யேடலர்மலர்கொண்டந்தவீசனையுமையைப்போற்றி
நீடுமாலயத்தைமூன் றுவலம்வந்துநேசிப்பாரே
லாடகத்திறைவன்வாழுமளகையினழகாய்வாழ்வார். (௧அ)

ஐப்பசிமதியின்முற்றுமத்தடந்தன்னின் மூழ்கிச்
செப்பருஞ்சாந்திராயணப்பெயர்விரதஞ்செய்வோர்
சுப்பிரமனத்தராகிந்தூலதேகத்தோடேவான்
மைப்பொலிகண்டர்வாழுமகாசிவலோகஞ்சேர்வார். (௧௯)

ஆடிமாதப்பிறப்பினந்தடத்தாடினோர்கள்
கேடிலாச்செல்வமெய்திக்கிரீசனுக்கன்பராவார்
நாடொறுமாடுவோர்கணற்பரிசுத்தராகி
நீடுநீர்வேலைசூழுநீணிலத்தரசராவார். (௨0)

பரிதியைமதியைத்தீண்டப்படர்கனல்விடவாய்ப்பாந்தள்
கருதியகிராணபுண்ணியகாலங்கட்செவித்தடத்திற்
றருதியெப்பேறுமென்றுசங்கற்பஞ்செய்துமூழ்கிற்
சுருதியின்முடிவாமீசன்றொல்லுலகடைகுவரே. (௨௧)

செனித்திடுந்தினத்தின் மூழ்கிச்சங்கரர்திருத்தாள்போற்றி
லனித்தியமானதேகமழிவிலாவிதேகமுத்தித்
தனிப்பதம்பெறுவர்திங்கட்டினத்தமாவாசைதன்னின்
மணித்தர்கடானம்பண்ணில்வானவராகுவாரே. (௨௨)

பிதிர்தினமந்தநீரின் மூழ்கியேபிண்டம்வைத்து
விதிவழிதிலோதகங்களிறைத்துமேற்பிதிர்களெல்லாங்
கதிபெறவைக்குமாந்தர்காதனன்மனைவிசுற்ற
மதியுடைமகப்பேறுற்றுமானிலத்தென்றும்வாழ்வார். (௨௩)

புண்ணியநாகதீர்த்தம்படிந்துபூசுரருக்கன்பா
யெண்ணிருதானஞ்செய்தாலெண்ணிலாக்கோடிகாலம்
வெண்ணிலவணிந்தவேணிவிமலர்வாழுலகின் மூன்று
கண்ணிறைபுருவம்பெற்றுக்களிப்புடனிருப்பரன்றே. (௨௪)

மாதவந்தத்தில்வந்தமகத்துவப்புகர்வாரத்தின்
மேதகுமத்தடத்தின் விருப்புடன் மூழ்கிப்பூக
நாதசங்கரனைப்பொன்னுவுடையைப்பூசித்தநல்லோர்
பாதகவினைகள்காற்றிற்பஞ்செனப்பறக்குமாதோ. (உ௫)

வேறு.

புன்னைவனத்தீசர்க்கனுதினமுமாட்டுவிக்கும்புனிதமான
விங்நாகதீர்த்தத்தின்பெருமையெவரெடுத்துரைப்பாரியான
றிந்து, சொன்னேனோர்கோடியிலோர்கடைகோடியெனச்சூ
தன்சொல்லக்கேட்டு, மின்னாசையைவிடுத்தமெய்ம்முனிவர்
சிரமசைத்துவியந்தார்மன்னோ. (உ௬)

பாகமாவுடைமருவுசங்கரர்வாழ்தலமும்மன்பாய்ப்படிந்து
ண்போர்க்கு, நாகவமுதனையவிந்நாகசுனைமகிமைபுநீர்கவில
க்கேட்டோஞ், சோகவிடாய்தீர்த்தருளுஞ்சங்கரமூர்த்தியின்
பெருமைசொல்வீரென்ன, யோகமுனிவரர்கேட்பச்சூதமு
னிபுரைப்பலென்றுங்குவந்துசொல்வான். (உ௭)

தீர்த்தவிசேடச்சருக்கமுற்றிற்று.

ஆ செய்யுள் - உஉ௬.

# மூர்த்திவிசேடச்சருக்கம்.

புன்னைமாவனத்தினீழற்புவியினிலனுதியாகி
யன்னகோமதியினோடும்மர்ந்தருளமலவித்தாய்
மன்னியதொண்டர்க்கெல்லாமங்களநல்கலாலே
தன்னைநேரிவ்விலிங்கஞ்சங்கரலிங்கமாகும். (௧)

வான்வளியன்னிர்மண்ணுய்வகுத்தவைந்திலிங்கத்துள்ளு
மேன்மையாம்புவியின்பாங்கர்மேவுமிவ்விலிங்கந்தன்னை
ஞானமாமுனிவர்சித்தரும்பரோடிம்பர்நாக
ரானவரெவரும்போற்றியறமுத்நான்கும்பெற்றார். (உ)

பூவருமயனுமாலும்போற்றுதற்கரியவள்ளல்
கோவருள்கொடுக்குந்தெய்வக்கோமதியுமையினோடு

மியாவருங்கண்டுபூசித்திகபரபோகமெய்த
மாவரராசைதன்னின்மகாசிவலிங்கமாகும். (ங)

சீர்த்திகொடேவமூர்த்தியசுரராற்செய்புமூர்த்தி
யோர்த்திகழ்நாகமூர்த்தியிவ்வுலகத்திறுள்ள
பார்த்திபரியற்றுமூர்த்தியாகியபடிவங்கொண்ட
மூர்த்திகட்கெல்லாமந்தச்சங்கரமூர்த்திமுன்னும். (ச)

கண்ணினைக்காதைக்கையைக்காலினைவருத்தஞ்செய்ய
வெண்ணியகன்மத்தாலேயெய்தியவியாதிக்கெல்லா
மண்ணினைமருந்தாய்நல்கித்தீர்த்திடுமகிமையாலே
புண்ணியவயித்தியலிங்கமாகுமிப்பூவிலிங்கம். (ரு)

சித்தர்கண்முனிவர்தேவர்சேவிக்கவழியாவீட்டின்
முத்தியைக்கொடுக்குஞ்சைவதலங்களின்முதன்மையாகு
மத்திருவிலிங்கந்தவ்னினதிகமாம்வரங்கொடுக்குஞ்
சுத்தசைதன்னியமாமிச்சுயம்பிரகாசலிங்கம். (சா)

தெய்வமாதலங்கட்கெல்லாந்தலைமைசேராசையாகு
முய்வருஷர்த்தந்தம்முட்டலைமையிவ்வுரகதீர்த்த
மைவளங்கெரிந்தகாளாரதர்முதலோர்போற்றுஞ்
சைவலிங்கங்கட்கெல்லாந்தலைமையிவ்விலிங்கமாதோ. (எ)

சமையங்கள்பலவிற்சைவசமயமேயதிகமாகு
மிமிர்குலமலைகடம்முளதிகநீண்மேருவாகு
முமையொருபாகங்கொண்டவொளிர்சிவலிங்கந்தம்மு
ளமலவானந்தசங்கரேசுரரதிகமாமே. (அ)

மனமொழிமெய்யிம்மூன்ராுன்மங்களவிலிங்கந்தன்னைத்
தினமினைந்துரைத்துப்போற்றல்செய்பவர்செனனமென்னும்
கனவிருட்காட்டைவெட்டிமூலமதறக்களைந்து
சனகாதியர்போல்வீட்டைச்சாருஞ்ஞானிகளேயாவார். (கூ)

சோமவாரத்திலிந்தச்சங்கரசுயம்பைப்போற்றி
நாமமாயிரத்தெட்டாலேவில்வவர்ச்சனைநடாத்திக்
காமமேமுதலமூன்றுகுற்றமுங்கடிந்துநல்ல
நேமமாயொருபோதுண்டுகொள்பவர்சிருபராவார். (கo)

வெள்ளிவாரத்திலிந்தச்சங்கரவிமலன்றன்னைக்
கள்ளவிழ்கரியகூந்தற்கவுரிகோமதியைப்போற்றி
நள்ளிருட்காலந்தன்னினயந்துபூசனைசெய்தேத்தி
லுள்ளியவரங்களெல்லாமுறுதியாய்ப்பெறுவான்றே. (கக)

சித்திரைத்திங்கடன்னிற்பூரணைத்தினத்திலேந்து
வத்திரத்தாலுமைந்துதொழினடாத்தியமகேசன்
சத்தியவடிவமானசங்கரமூர்த்திதன்னை
முத்தியைவிரும்பிப்பூசித்தவர்பலன்மொழியலாமோ. (கஉ)

நற்கடமாலுநாமுமொன்றெனநம்பன்காட்ட
விற்கடகப்பூண்செங்கைவிமலைநற்றவம்புரிந்த
கற்கடகத்திற்பூரணைதினத்தினிற்கனிந்துபோற்றி
லற்கடற்பிறவிநீக்கியருட்கடன்மூழ்குவாரே. (கந)

மாசிவராத்திரிதன்னிலிந்தமாவிலிங்கந்தன்னைப்
பூசனைநாலுசாமம்புரிந்துபோற்றியமெய்யன்பர்
காசியிற்கங்கைமூழ்கிக்கடவுளைக்கற்பகால
நேசமாய்ப்பூசைசெய்தபலனெலாநேர்குவாரே. (கச)

பஞ்சபாதகமறிந்துசெய்தபாவியரானாலுந்
தஞ்சநீயென்றிம்மூர்த்திதாளிணைபணிந்திட்டாரே
லஞ்சனீயஞ்சனீயென்றருட்கடைப்பார்வைநல்கி
நஞ்சினையமுதமாக்குந்தன்மைபோனயந்துகாக்கும். (கரு)

அற்பவாணாளைப்பெற்றயாங்கணின்னகமத்தின்
சொற்பயனறிந்துபூசைத்தொழில்செயற்குரியரல்லேம்
பொற்பதந்துணையேயென்று போற்றுமெய்யடியார்க் கெல்
லாந், தற்பதங்கொடுக்குமிந்தச்சங்கரசயம்புவொன்றே. ()

அல்லுநற்பகலுமின்றியடிநடுமுடிவுமின்றி
யெல்லையில்பிரமந்தானேயிவ்வராசைதன்னிற்
பல்சராசரத்தையெல்லாம்பரிந்துகாத்தருளவேண் டி
நல்லதோர்விளையாட்டாகவில்சிவலிங்கமான. (கஎ)

கொவ்வைவாயிமயச்செல்விகோமதிவலப்பாகத்திற்
றிவ்வியசொரூபமாகத்திருவருள்புரிந்திருக்கு

மிவ்விலிங்கத்தைப்போற்றுமியல்புளோர் பிறப்பென்றேது
ம்,பௌவமேழ்கடந்துசித்தபரிசுத்தராகுவாரே. (கஅ)

மறுவறும்பிரதோடத்தில்வான்சுடரத்தமத்தைப்
பெறுபொழுதாலயத்தைவலம்வந்துபிறைவான்கங்கை
யறுகணிசங்கரேசரம்மைகோமதியையன்பா
னறுமலர்த்தாளைப்போற்றினமனைவென்றிடுவரன்றே. (கக)

மட்டவிழிதழிவேய்ந்தமணிமுடிச்சங்கரேசர்க்
குட்டதும்பன்பராகியொருபொழுதுணவுநீக்கி
யட்டமிவிரதநோற்போரகத்தினிற்குறிப்பாயெண்ணு
மிட்டமாம்பலன்களெல்லாமெய்தியின்புறுவர்மாதோ. (உ0)

வேறு.

அட்டாங்கபஞ்சாங்கதிரியாங்கமேகாங்கமாகவன்பாய்,மட்
டார்ந்தமலர்ப்பதத்தில்வந்தனைசெய்திவ்வரனைவழிபட்டாரே
ற், கட்டானபிறப்பறுத்துக்காமமுதலறுபகையுங்கடிந்துநீக்
கி, யெட்டர்த பரமபதத்தின்பசுக போகத்தாழ்ந் திருப்ப
ரன்றே. (உக)

சோடசமாவுபசாரத்தாட்டியாடைகள்புனைந்துதூயவாசத்,
தேடலர்நால்வகைமலருஞ்சூட்டிநவமணிப்பணிக ளிசையப்
பூட்டித், தேடரியபாலடிசில்சித்திரவன்னநிவேதித்துத்தெய்
வக்கஞ்சத்,தாடலைமேற்கொண்டுபணிந்திடிலிந்தமூர்த்திதரு
ஞ்சகலபேறும். (உஉ)

சங்கமொன்றிற்புனல்கொண்டிச்சங்கரனையாட்டிடிலாயிர
த்தெண்சங்க, மங்கலநற்புனல்கொண்டுமந்திரவிதியாயாட்டு
மகத்துவஞ்சேர்வார், பொங்குதிருமேனியெல்லாம்பொதிந்த
னத்தாலபிடேகம்புரிந்தபேர்க, ளங்கணன்றனுலகெய்தியன்
னமொன்றுக்குகமொன்றுயமர்ந்துவாழ்வார். (உ௩)

மடைப்பளியிலன்னமமைத்திடுவதற்குப்பாத்திரங்கண்ம
ணிநீராட்டக், குடத்துடனேதூபக்கலன்மூன்றைந்தேழொ
ன்பானுய்க்குறித்தலக்கத், தடுக்கியதீபத்தட்டுக்குடைகவரி
கண்ணுடியாலவட்டங், கடற்கடவுண்டமுதர்க்குமிக்கடவுட்
களித்தவர்கள்கயிலைசேர்வார். (உச)

மீபுரங்கணைத்தெரித்தவிச்சங்கரேசுரர்க்குவிருப்பமாகக், கோபுரங்கண்மண்டபங்கடிருமதில்கள்குறைவின்றிக்குறித்துச்செய்வோர், மாபுரந்தராதியும்பர்வந்துதொழப்புட்பமானத்திலேறி, நூபுரச்செஞ்சரணுமையோடரனிருக்குங்கயிலையினிடையிற்சேர்வார். (௨௫)

மணிப்பணிகள்கூழைநாயகருளத்திலுவப்புறநன்மணியாற்செய்தோர், கணிப்புறுவாகனமமைத்தோர்கரிபரிதேர்சிவிகைவாகனத்திலேறிப், பணித்தலைமேலிருந்தவிந்தப்பாருலகுக்கரசராய்ப்பத்தர்பாசந், துணித்தசூலப்படையார்தொல்லுலகிற்சென்றழிவில்போகந்துய்ப்பார். (௨௬)

புத்தமுதமதியணிந்தசிவசங்கரேசுரர்க்குப்புழுகுவாசக், கத்தூரிசெறிந்தநறுங்கலவையினுன்முழுக்காப்புக்கனிந்துசெய்வோர், வித்தமுறுதெய்வகற்பகாடவியிலரம்பையர்கண்மென்கையாலே, கொத்தலர்நன்மலர்சூட்டிக்கூடிவிளையாடவன்புகூர்ந்திருப்பார். (௨௭)

மருவாருங்கொன்றையணிசங்கரரைவணங்கிமுதல்வாசறன்னிற், றிருவாசிசெய்துவைத்துத்திருவிளக்கிட்டோர்தெய்வமாதரெல்லா, மிருபாலுமணிவிளக்கையிருகையாலேந்திவரவிந்திரபோக, மொருநூறுகோடியுகமனுபவித்துச்சிவபதத்திலுறுவரன்றே. (௨௮)

கருப்பூரதீபமிட்டுக்கருப்பூரவடிவாஞ்சங்கரரைக்கண்ணுல், விருப்பூறத்தெரிசிக்குமேலவர்கள்விமானத்திலேறிவெள்ளிப், பொருப்பூரதாயிருந்துபோதசிவானந்தபரஞ்சோதிபொற்றுட், டிருப்பூரணத்துடன்கலந்துநிறைந்துமீளாதென்றுந்திகழ்வரன்றே. (௨௯)

வரராசைநாதன்வைத்தியநாதன்சீராசைநாதன்வானோர், பரவுபுன்னைவணநாதன்சங்கரலிங்கங்கூழையாண்டி பணபாய்த், தரைபுகழுஞ்சங்கரநாராயணன்சங்கரமூர்த்திதானென்றெட்டாய், விரவுதிருநாமங்கள்பெற்றிருக்குமிம்மூர்த்திவிசேடமூர்த்தி. (௩௦)

அருட்கடலாஞ்சங்கரர்சன்னிதிமுன்புபரத்தையர்களாடல்பாட, லிருக்குமுதனல்வேதமெடுத்தோதச்செய்தல்பலவின்னியங்கள், பெருக்கமுடன்முழக்குவித்தோர்காமியந்திற்பெருங்காலம்பெயராதுற்றுக், கருங்கடலைக்கரைகடந்நுகடடவுதிருவடிக்கமலங்கைக்கொள்வாரே. (௧௬)

ஆறுகாலமுமிந்தச்சங்கரலிங்கம்பதத்தைபன்பாய்ப்போற்றி, மாறிலாப்பொன்மணியாலயத்தைவலமாய்வருவோர்மதிபோல்வெள்ளை, நீறுபுனைந்துருத்திராக்கந்தரிப்பவர்களைத்தொழுத்தைநினைவிற்கொள்வோர், பேறுசொலவந்தவுமைபாகனலான்மற்றொருவர்பேசொணாதே. (௧௭)

திருத்தலமுந்தீர்த்தமுமூர்த்திமுறைத்தகுதமுனிசெம்பொற்றாளை, விருத்தமுனிவரெல்லாம்விரையலர்கொண்டர்ச்சித்துவியந்துபோற்றி, மருந்தயிலுஞ்சங்கபத்மர்வாதசிவிர்த்திக்காகமறையோன்காணுக், கருந்தனுருச்சங்கரநாராயணராய்க்காட்டியதைக்கழறென்றாரே. (௧௮)

மூர்த்திவிசேடச்சருக்கமுற்றிற்று.

ஆ செய்யுள் - உ௫௯.

# சங்கரநாராயணரானசருக்கம்.

அருந்தவரிவ்வணமறைபவாதியைப்
பொருந்தியவுணர்வினன்புகரின்மாதவன்
விரிந்தநூற்கடலுணர்சூதன்வேட்கையாய்ந்
தெரிந்தநற்கதையினைச்செப்பன்மேயினான். (௧)

வேறு.

இன்றவம்புரிபுங்காசிபன்மனைவியிருவருட்கத்துருவென்பாண், மின்றிகழுயிற்றுச்சேடனேமுதலாம்வெவ்விடநாகங்களுயிர்த்தாண், மன்றலங்கோதைவினதைதன்வயிற்றின்வல்லுகிர்க்கலுழனுங்குதித்தான்; கன்றியமனத்தினிகலினைப்புரிந்துகழிந்ததுபற்பலகாலம். (௨)

வேறு

வெஞ்சினவிடங்கால்வெய்யவகந்தனேமுதலநாக
மஞ்சிறைக்கலுழற்கஞ்சியவனதுசரணில்வீழ
வெஞ்சலிலுமக்குவேட்கையாதெனவெம்மையெல்லாஞ்
செஞ்சுடர்ப்பொழிசின்மெய்யிற்சீர்பெற வணிதல்வேண்டும்.

என்றலுங்குழவிவெய்யோனெழில்பெறவிளங்குகின்ற
வென்றியங்கலுழன்மெய்யிலரவெலாம்விழைந்துபூண்டா
னன்றுதொட்டணிகளாகத்தமதுநட்பவன்பால்வைத்துச்
சென்றனநாகலோகந்திவிடப்பாந்தளெல்லாம். (௪)

வெள்ளைமுள்ளெயிறுருக்கும்வெவ்விடப்பகுவாய்ச்சேடன்
பள்ளிகொளணையதாகப்பசுந்துளாய்மாயற்சேர்ந்தா
னுள்ளொளியணியதாகவுருகெழுமழுவாளேந்தும்
வள்ளல்பான்மணிச்செஞ்சூட்டுவாசுகியெய்தினானே. (௫)

உரைப்புழிவிஞ்சையெல்லாமுணர்ந்திடவேண்டிக்காற்று
மருத்தியாயருந்திடாமலற்றைநாட்சங்கபத்மர்
வரத்தினுயர்ச்சிமிக்கவாசுகியங்தன்றன்பால்
விருப்பினுளுள்ளம்வைத்துமெய்த்தவமியற்றினாரே. (௬)

அரியநற்றவங்கண்மேன்மேலாற்றலுமாற்றல்சான்ற
விருவர்தம்முகத்தினின்றுமெழுதருவிடத்தின்வெய்ய
விரியழற்புகைபரந்துவிம்மலாலரவமெல்லாந் [ர்.
தெருமரலுளத்திற்கொண்டுதெருண்டனர்தெருண்டபின்ன

வெள்ளிவேதண்டமீதுவிண்ணவரிறைஞ்சியேத்தப்
பிள்ளைமானேக்கியோடங்குறைதருபெம்மாற்கன்பா
யொள்ளொளியணியதாகவுறைந்தவாசுகியின்பாலு
முள்ளெயிற்றநந்தன்பாலுமுதிர்விடநாகஞ்சேர்ந்த. (௮)

அடைந்தநாகத்தைநோக்கியாதிவணடைந்ததென்ன, விட
ந்திகழரவமங்ஙன் விளைந்தமைவிளம்பலோடு, மடந்தைபாக
ன்பாற்கொண்டல்வண்ணன் பால்விடைகொண்டாங்கட், ப
டந்திகழிருவர்தங்கள்பதியினிலடைந்தாரன்றே. (௯)

நற்றவமியற்றுஞ்சங்கபத்மரைநயந்துநோக்கிக்
குற்றமிலவர்கள்வேண்டும்வரங்குறைவின்றியீய்ந்து
கற்றைவார்சடையோன்பாலுங்கமலலோசனன்றன்பாலு
முற்றவாசுகியநந்தனுறைந்தனன்விரைவிற்சென்றே. (கo)

பைத்தலைக்கவைநாவெய்யபத்மனேயல்லாநாக
மெய்த்தவமியற்றித்திங்கள்வேணியர்க்கன்புபூண்ட
மைத்தவல்விடங்கால்பத்மன்மாயனுக்கன்பஞ்சி
யுய்த்துணர்சங்கன்றன்னோடுரைத்தனன்மாறுகொண்டே. ()

எம்மிறைபெரியனென்றுமெம்மிறைபெரியனென்றுந்
தம்மின்மாறுகிப்பொங்கிச்சாற்றியசங்கபத்மர்
செம்முகநோக்கிநீங்கடெளிவுறச்செப்பவல்லார்
நம்முழையில்லைப்பாரினடமினென்றுரைத்தநாகம். (கஉ)

அரவெலாமுரைத்தவண்ணங்கேட்டலுமறிவினுடிப்
பரவருந்தகையனுனபதஞ்சலிபாதம்போற்றித்
தெரிவருங்கலைகளெல்லாஞ்செவிப்புலன்குளிரக்கேளா
வுரவுநீருலகின்மக்களுருக்கொடுமேவினாரே. (கங)

தெண்ணிலாக்குழவிவேய்ந்தசிவனடிபடிந்துமாயோன்
புண்ணியநதிகடோய்ந்துபுகரறுசங்கனென்னு
மண்ணல்வாளரவின்வேந்துமறிவுசால்பத்மன்றானுங்
கண்ணகன்ஞாலமேத்துங்காசியினெய்தினாரே. (கச)

காசியையடைந்துமுத்தக்கதிரிளமுறுவற்செவ்வாய்
மூசிவண்டுறையுங்கூந்தன்முகிழ்முலைபங்கின்வாழு
மீசனேபெரியோன்செய்யாளிறைவனேபெரியோனென்று
மாசிலாமுனிவர்தம்பான்மதமுயர்த்துரைசெய்தாரே. (கரு)

உரையதுகேட்டலோடுமுரகர்தம்வதனநோக்கி
முருகவிழிதழிவேய்ந்தமுதல்வனேபெரியோனன்னேர்க்
கரவிடைத்துயிலுமாலுமயிக்கமாம்பெருளாமென்றே
மருளறத்தெரிதன்னூலான்மலைவறக்கூறினாரே. (கசு)

தாமரைச்செங்கணன்மேற்றழைத்தபேரன்பாற்பத்மன்
மாமுனியுரைகொள்ளாதுசிற்றன்மாதவத்தோர்நோக்கி

யேமுறுமுங்கள்வாதமிவ்வுழித்தீர்வதன்று
போமின்விண்ணுடிகாக்கும்புரந்தரனவையிலென்றூர். (கஎ)

அறநெறிமுனிவரவ்வாறறைதலுமறிவுசான்ற
விறல்கெழுபுயங்கவேந்தர்விண்ணவர்வடிவந்தாங்கிப்
பொறிவரிச்சுரும்பர்மூசப்பொன்னிணர்முகையவிழ்ந்து
நறைகமழ்பாரிசாதநாட்டினிலெய்தினரே. (கஅ)

வேறு.

பாலொத்ததீஞ்சொன்மடவாரிருபாலும்வீசுங்
கோலக்கவரிக்கொழுங்கற்றைமென்கொங்குலாவு
மாலைப்புயமேற்றுயல்வந்தவபங்குசோதி
நீலக்கிரிமீதுநிலாத்தவழ்செவ்விகாட்ட. (கக)

துளிசிந்துகொண்டறவழ்வானெழூதோற்றநோக்கிக்
களிகொண்டசாயலிளங்கார்மயிலாடிமாபோ
லிளவஞ்சியன்னமருங்கிற்றிடுமென்னவீங்கி
வளர்கின்றகொங்கையரமங்கையர்மன்னியாட. (உ௦)

அந்தண்ணிழறற்கப்பகத்தம்பொனரும்பவிழ்ந்து
சிந்துந்திவலைப்பசுந்தேன்முடிமேற்றெறிப்ப
நந்தும்புகழ்த்தும்புருநாரதர்நாமகல்லியா
ழுந்தின்னரம்பின்னிசைத்தேன்செவியூடுகுப்ப. (உக)

காரேந்திரின்றபகலோனெழில்காட்டுகின்ற
சீரேந்துசெம்பொற்கதிர்மாமுடிசேண்விளங்க
வாரேந்துகொங்கையபிராணிமணப்பவிண்ட
தாரேந்துமார்பனணியாரந்தழைத்துமின்ன. (உஉ)

இருள்சீத்தெழுந்தவிளஞாயிறிலங்குமாபோல்
விரிசோதிகக்குமணிவிட்டுவிளங்குசெம்பொ
னரியாசனத்திலிருந்தான்றன்னையாடல்கூருஞ்
செருவார்குலிசப்படைவேந்தனைச்சென்றுகண்டார். (உங)

வேறு.

படர்ந்தகாதலிற்கண்டடிபணிந்தனர்கிற்ப
விடைந்தநுண்ணிடையிந்துவாணுதலயிராணி

வடங்கொள்செப்பெனும்வனமுலைதிளைத்திடுமார்ப
னடைந்தநும்வரவென்னெனவருளுடனறைந்தான். (உச)

மங்குல்கண்படும்வெள்ளியம்பொருப்பினில்வாழுஞ்
சங்கவெண்குழையிறைவனேதனிமுதலென்றும்
பங்கயத்தடங்கண்ணனேபரம்பொருளென்று
மிங்குவந்தனமென்றனருரகருக்கிறைவர். (உரு)

இருவர்மாற்றமுங்கேட்டலுமிமையவர்க்கிறைவ
னருகிருந்தகல்வியாழத்தையருளுடனோக்கித்
தெரியும்வண்ணநீசெப்புவாயிவர்க்கெனச்செப்ப
மருளுறுவகையறிவினல்வகுத்துரைவழங்கும். (உசு)

விண்ணின்மீக்கிளர்வெள்ளியம்பொருப்பினின்மேனாட்
பண்ணினன்மொழிமலைமகள்பரமனைவணங்கி
யண்ணலேநறைப்பசுந்துளாயலங்கன்மாலுடனீ
நண்ணுமவ்வுருக்காணவேட்டனனெனநவின்றாள். (உஎ)

நிரையிதழ்ப்பொனின்கோதைவார்குழனினக்கேது
மரியமாதவமாற்றினலல்லதவ்வுருவந்
தெரியக்காண்டன்மற்றரிதெனச்செப்பினன்றீங்தேன்
சொரியுமந்தளிரிதழியங்தொடையணிதொல்லோன். (உஅ)

சிறைமருங்கொசிந்திறுமிறுமென்னல்போற்சிறைவண்
டறைபுமெல்லிணர்க்கருங்குழலணிவரைமடந்தை
யிறைவமாதவமியற்றவோர்தலமியம்பென்ன
மறிபுலாங்கரத்தண்ணலும்வழங்கன்மேயினனால். (உகூ)

முத்தமிழ்க்குறுமுனிவன்வீற்றிருக்குமோர்தலனுண்
டத்தலத்தினிலரும்பவிழ்புன்னையின்வடிவாய்
மெய்த்தவம்பலரியற்றினர்மெல்லவாங்கேகி
யெய்த்தநுண்ணிடைநீயுமாதவமியற்றுதியால். (௩0)

முருகுவிம்மியமொய்குழலவ்வுருநினக்கூத்
தெரியவவ்வுழிக்காட்டுவந்தேன்பொழியலங்கற்
கரியமாயனுநாமும்வேறின்மைதான்கருதிப்
பெரியமாதவர்பெறலருமுத்தியைப்பெறுவார். (௩க)

வெள்ளியங்கிரியொருவிநீமெய்த்தவமியற்றுந்
தெள்ளுநீம்புனற்பதியிலியாஞ்சிறந்தினிதுறைவோங்
கள்ளுலாங்குழலப்பதிகருதினரியாரு
முள்ளருந்தனிவீடுசென்றடைவரென்றுரைத்தார். (௩௨)

என்றுகூறலுமிதழியஞ்சடைமுடியிறைவன்
மன்றன்மாமலர்ச்சேவடிவணங்கியாங்கேகக்
குன்றவெம்முலைக்கொடியிடைக்குயின்மொழிபரவுந்
துன்றுதேவரைநோக்கினளினையனசொல்வாள். (௩௩)

அரனுமாயிதட்டுளவணிமாலுமொன்றுரு
முருவநோக்குவானருந்தவமியற்றுதற்குவந்து
பொருவிறென்புலத்தேகுவல்பூந்தருமிடைந்த
விருவிசும்பினும்மிருக்கையினேகுதிரென்றாள். (௩௪)

பூண்டவன்பினிற்போகலார்பொருப்பிளங்கன்னி
சேண்டயங்கியசில்லரிச்சிலம்படிவணங்கி
யாண்டுநாங்களுமடைந்துனக்காட்செயுமாறு
வேண்டினேமதுபணித்தியென்றிறைஞ்சினர்விண்ணோர். ()

அளிதவழ்ந்தபூங்குழலினளமரரைநோக்கித்
தளிர்செய்புன்னையின்காவினீர்தருவுருத்தாங்கித்
துளிநறுவுயர்த்தலர்ந்தடைந்தோட்டின்மேன்மலரால்
விளைநறுங்கனியான்மனமகிழ்ச்சியைவிளைமின். (௩௬)

தாதுலாங்குழலரம்பையராவுருத்தாங்கிப்
போதுதோறுமின்பால்பொழிந்துளமகிழ்புரிவீ
ராதலாலெமக்காவுடையாளெனச்சிறந்த
கோதினுமமெவ்வுலகமுங்கூறிடவேண்டும். (௩௭)

அழிவிலியோகியருச்சகராகியேபூசைத்
தொழிலியற்றுமின்றும்புருநாரதர்நீவி
ரிழிவினல்லிசைபாடுமினெறிவிளக்கிடுநீ
வழிவிளக்குவாய்வளியெனப்பணிவிடைவருத்து. (௩௮)

கணங்களிற்சிலர்மானிடவுருவமாய்க்கனிந்து
மணங்கமழ்ந்தபூமாலைத்தொண்டியற்றுமின்மற்றோ

ரிணங்கிகின் றுசிர்பாதசேவைத்தொழிலிபற்றி
வணங்குவீரெனமலர்விழிக்கருணைவைத்துரைத்து. (௩௯)

அந்தரத்தினினமரர்களடிதொழவாரு
மிந்திரன்சமுகத்தினினெழினடமியற்றுங்
கந்தமென்குழற்கணிகையர்மனுடகன்னியராய்
வந்துநம்முனமாடல்செய்வீரெனவழங்கி. (௪0)

இன்றுநீவிர்களியாவருமிக்கணத்தெழுந்து
கொன்றையஞ்சடைக்குழகன்வாழ்காசிகோகன்னந்
தென்றமிழ்த்திருமதுரையின்றெரிசனைசெய்து
மன்றலந்துணர்ப்புன்னையம்பொதும்பரின்வம்மின். (௪௧)

மண்ணுநீருமவெங்கனலியும்வல்விசைவளியும்
விண்ணும்ஞாயிறுந்திங்களும்விரிந்தசிவனுமாய்
நண்ணுமாசிவலிங்கங்களனிலவரைப்பி
னெண்ணிலங்ஙனஞ்சத்தியும்வேறுபட்டிருக்கும். (௪௨)

வேறுபட்டதால்விருப்புடனிறைஞ்சுவோரெய்தும்
பேறும்வேறதாம்பிள்ளைவண்டின்னிசைமிழற்று
நாறிணர்ப்புன்னைவனத்தினினவிற்றியவெல்லாக்
கூறுமோருருவாகிவீற்றிருப்பனங்குழகன். (௪௩)

என்றுகூறியெவ்வுலகமுமீன்றருளிறைவி
மன்றலந்துணர்மலிபுனற்பொருநையின்வடபாற்
பொன்றிகழ்ந்தபூந்தாதுகுபுன்னையங்காவிற்
சென்றுமேவினள்சேடியர்வழுத்தினர்செறிய. (௪௪)

உற்றபுன்னையம்பொதும்பரினிளநறுவுயிர்க்குங்
கற்றைவார்குழற்கதிரிளவனமுலைக்கயற்கண்
பற்றிலாதநுண்மருங்குலாளாயிரம்பருவ
நற்றவம்புரிந்திருந்தனளுயகனுவப்ப. (௪௫)

மாதவத்தினுல்வருந்தினளெனமனக்கொண்டோ
காதன்மீக்கொளத்திருவுளஞ்சாலவுங்களித்தோ
போதினுன்முகனறிகலாப்பொன்னவிர்சடையோ
னாதிநாயகிதவம்புரிகாவினைவந்தடைந்தான். (௪௬)

தேனுலாந்துணர்ப்புன்னையம்பொதும்பரிற்சென்று
தானுமாலுமொன்றாகியவடிவினைத்தயங்க
மானுலாங்கரத்திறையவன் காட்டினன்வணங்கிக்
கானுலாங்குழலுமையவள் கண்டுகண்களித்தாள். (சஎ)

களித்தநெஞ்சகங்கனிந்துதென்கடல்விளையமுதந்
துளித்தபோலுநன்சொல்லினாள்பன்முறைதுதிப்ப
முளைத்தவெண்கதிர்முகிணிலாமுடித்தவெம்முதல்வ
னளிப்பன்வேண்டியதியம்பெனவருளினனருளால். (சஅ)

தழைத்தகாதலான்மலைமகடாங்குமிவ்வுருவ
மொழித்துநின்னுருத்தாங்குவாயெனவுரைத்திடலுங்
குழைத்தபைந்தளிர்க்கொன்றையான்றன்னுருக்கொண்டு
மழைக்கண்மாதொடுபுன்னையங்காவினில்வதிந்தான். (சகூ)

ஆங்கணெய்திரீருந்தவம்பற்பலவாற்றி
மாங்குயிற்சிறுகுதலையாள்மகிழ்ந்துமுன்கண்ட
தீங்கிலவ்வுருக்காணினுஞ்சிந்தைமயக்க
நீங்குமென்றனன்விண்ணவர்குரவனுமலன். (ருo)

வெவ்விடத்தராவரசர்கள்வியாழத்தைநோக்கி
யெவ்விடத்ததுகூறியதலமியம்பென்னக்
கொவ்வைவாய்மலைமகளொடுகுழகன்வீற்றிருக்கு
மவ்விடத்தினையாங்கவன்கூறுவானமைந்தான். (ருக)

வேறு.

விரிசடையோனுறைவேணுவனத்திற்குமேல்பால்விண்ணகடுதோய்ந்து, மருவிரிசண்பகவனத்தின்வடபாற்றண்டேனருந்திவண்டுபாடு, முருகுகமழ்களாவனந்தின்றென்பாற்றெண்கடன் ஞாலமுழுதுமேத்த, வுரைசெறிந்தபுன்னைவனமொன்றுளதாலதன்பெருமையுரைக்கற்பாற்றே. (ருஉ)

இனமலர்த்தாரணிகூந்தலிமயமயில்திருமுன்னரிமையோர்செய்த, சுனையுளதச்சுனைபடிந்துதூய்தவமியற்றுதிரேற்சுடர்வெண்கிற்றுப், பனிமதியமுடித்தபிரான்பசுந்துளவோனொருபாலாம்படிவங்காட்டுங், தனிகர்வேறிலதந்தலத்தினிலேகுதிரென்றுசாற்றினனே. (ருங)

ஏகுமினென்றுரைத்திடலுமிருவிசும்புநீங்கிநிலனேழும் போற்று, நாகிளமென்மலர்ப்புன்னைநறுங்காவினடைந்துசு னைநளிர்நீராடிப், பாகுமென்மொழிபாகனடிநினைந்துபசுந்து ளவோன்பாதந்தேர்ந்து,ளோகையுடன்மாதவங்களுஞற்றின ரான்மணிச்செஞ்சூட்டுரகவேந்தர். (ருச)

அருகினிலாங்கிருவோருமான்றபலமாதவங்களாற்றுங்கா லைக், கருவிடவாளெயிற்றநந்தன்கார்மேகவண்ணனடிக்கமல ம்போற்றி, புருகெழுவாண்மழுத்தடக்கையொருவனுடனொ ன்றாகினுருவுகாண்பா, னிருநிலமேலரியதவமியற்றுகின் றான்பத்மனெனவிசைத்தானன்றே. (ருரு)

விடப்பாந்தளணைத்துயில்வோன்வெவ்வராவரசின்முகம்வி ரும்பிநோக்கிப், படைப்பானுமளிப்பானும்வேறுளவோவமர ரெனப்படுவோரெல்லாஞ், சுடர்ப்பால்வெண்மதிக்கொழுந் துசூடினோன்கூறுவார்சொல்லுங்காற்றன், னிடப்பாலாகம் முருவுமாங்கவனைகாட்டுமெனவிசைத்தானன்றே. (ருசு)

விடமொழுகுமுள்ளெயிற்றுவாசுகிவெண்மதிக்கொழுந்து மிலைந்தவண்ணன், மடலவிழுஞ்செங்கமலமலரனையகுரைக ழற்றாள்வணங்கியேத்தி, யுடைதிரைப்பாற்கடற்றுயில்வோ ன்றன்னுடனொன்றாகியநின்னுருவுகாண்பான், புடவிமிசைய ரியதவம்புரிகின்றான்சங்கனெனப்புகன்றானன்றே. (ருஎ)

குருமணிச்செஞ்சூட்டரவங்கூறுமுரைமனக்கொண்டுகு ழவித்திங்கள், விரிசடையின்மிசைபுனைந்தோன்வெள்ளிவரை நடந்தனையவிடைமேற்கொண்டு, திரைசெய்கடல்பருகுமு னிதெள்ளுதமிழ்த்தென்றிசைக்கோர்திலகமாகி, யிருவிசும்பு தவழவுயர்ந்திணர்விரியும்புன்னைவனத்தேகினானே. (ருஅ)

குழவியிளமதிதவழுங்குடுமிநெடுமாணிக்கக்குன்றுசேர் ந்த, பொழிகதிர்சூழ்முழுநீலப்பொருப்பென்னத்தன்னொரு பாற்புவனங்காக்கு, மழலுமிழுங்கூராழிபரவணையானுருத்தி கழவந்திவண்ணன், விழிகவரும்வனப்பினொடும்வெவ்வராவா சர்முன்னேவெளிப்பட்டானே. (ருகூ)

வேறு.

எறிதிரைக்கங்கையாறுவட்டெடுக்குமீர்ஞ்சடையொருபுடையிலங்கச், செறிகதிர்பரப்புமணிமுடியொருபாற்சேட்டிளம்பரிதியிற்றிகழ, பொறிவரியரவக்கொடுங்குழையொருபாற்பொலிதரப்புதுவெயிற்கற்றை, நிறைதருமகரகுண்டலமொருபானீடிருள்பருகுபுநிலவ. (௬௦)

கடல்விளைபவளச்சடையின்மேற்கிடந்தகலைமதிக்குழவிவிட்டெறிக்கு, நெடுநிலாக்கற்றைதவழ்வதுபோலநீற்றணியொருபுடைநிலவப்,படரொளிபரப்பும்பசும்பொனின்மௌலிப்பருமணிக்கெழுமுசெஞ்சூட்டிச், சுடர்தவழ்தன்னதேங்கமழ்நானத்திலதமோர்புடையினிற்றுலங்க. (௬௧)

ஊழிவெங்கனல்கான்மழுப்படையொருபாலொளிர்தரவுருகெழுதோற்றத், தாழிமற்றொருபாலழலுமிழ்ந்திலங்கவழல்விடமொழுகுமுள்ளெயிற்றுப், பாழிவாய்த்துத்திப்பஃறலைக்கவைநாப்பருமணிக்கெழுமுசெஞ்சூட்டிச், சூழரவொருபாற்றுயல்வரவொருபாற்சுடர்விடுபசும்பொனூண்டிலங்க. ()

பிள்ளைவண்டரற்றநளையவிழ்கடுக்கைப்பிணையலோர்புடைநறுப்பிலிற்ற, விள்ளுமென்முகையபசுந்துழாய்ப்படலைவிரையுயிர்த்தொருபுடைமிடைய, வள்ளுகிர்ப்பேழ்வாயுழுவையம்பசுந்தோலுயர்ந்தொருமருங்கினிற்றுழ, வொள்ளொளிவிரிக்கு மாடகப்பசும்பொன் னுடையொருபுடை செறிந்தொளிர. (௬௩)

உரைபெறுவேதத்துச்சிவீற்றிருக்குமொருமலரடியின்மேற்செறிந்த, விரியிருள்பருகுமெரிமணிச்சூட்டுவெவ்வராவணிகழன்மிளிரக், கருவிடமுயிர்க்குமுள்ளெயிற்றகல்வாய்க்கட்செவிப்பஃறலைக்கிடையா, ரிருநிலமளந்தவொருமலரடிமேலிலங்கொளிப்பொலங்கழலிலங்க. (௬௪)

வேறு.

ஒளிபரந்திமைக்கநின்றவுருவுகண்டுருகியுள்ளங்
களிகொளவடியிற்றாழ்ந்துகைமலர்முடியிற்கூப்பி

விளை தரப்பரமானந்தமெய்விதிர்விதிர்ப்பக்கண்கள்
துளிகொளவுரகவேந்தர்பன்முறைதுதித்தாரன்றே. (சுரு)

நாறிதழ்க்கமலச்செங்கணளிர்மலர்த்துளபமாலுங்
கூறெனவுணர்கிலாதகூரறிவின்மையாலே
வேறெனவுணர்ந்துளேற்குவிழியருள்சுரந்ததென்னை
யாறணிகடவுளென்றுங்கடிதொழுதுரைத்தான்பத்மன். ()

அவ்வுரைகேட்டலோடுமகமகிழ்ந்தவரைநோக்கி
யெவ்வரமேனுமீவனிசையினீர்விழைந்ததென்னக்
கொவ்வைவாய்மடந்தைபாகன்கூறலுமணிச்செஞ்சூட்டு
வெவ்வராவரசர்தாங்கள்வேண்டுபவிளம்பலுற்றார். (சுஎ)

ஐயநின்கூறேமாலுமயன்முதற்றேவுமென்னு
மெய்யுணர்வேயெஞ்ஞான்றும்விளைவுறவேண்டுமீங்கே
கொய்புநற்போது தூஉயுன்குரைகழலிலங்குநோன்றான்
மைபறவழுத்தியாங்கள்வைகலும்வைகல்வேண்டும். (சுஅ)

தொடுகடலுடுத்தபாரிற்சொலருபாவமீட்டுங்
கொடியருமொருகாலந்தன்குவளையஞ்சுனைநீராடிக்
கடிநறுவொழுகுஞ்செய்யகமலமொத்திலங்குநின்பொன்
னடியிணைவணங்கப்பெற்றுலழிவில்வீடெய்தல்வேண்டும்.()

ஏட்டிணர்ப்புன்னைநீழலென்றும்வீற்றிருந்துஞாலம்
வேட்டனவழங்கல்வேண்டும்விமலவென்றிறைஞ்சலோடுங்
கேட்டநல்வரங்களெல்லாங்கேட்டவாறருளியாங்குச்
சூட்டராவரசர்க்கல்லாற்றோன்றிலனுறைந்தானன்றே.(எ0)

சங்கரநாராயணஞானசருக்கமுற்றிற்று.

ஆ செய்யுள் - ௬உரு.



## உக்கிரன்வழிபடுசருக்கம்.



என்றலுமுனிவர்வாழ்த்தியினமலர்முருகுவிம்மு
மன்றலம்புன்னைநீழன்மறைந்துறையண்ணறோன்றி

நின்றவாறுரைத்தியென்னநெஞ்சகங்குழைந்துகூற
நன்றெனமகிழ்ந்துசூதன்மீளவுநவிலலுற்றான். (௧)

மலையமாமலையிற்சாந்தும்வயிரமும்வரன்றிப்பாயு
மலைகுலாம்பொருநையாற்றினகன்கரைமணவூர்மேவுஞ்
சிலைகுலாங்குவவுத்திண்டோட்டென்னவனரவாய்வேம்பி
னிலைகுலாமலங்கன்மார்பனெண்டிசைபுரக்குங்கோவே. (௨)

மற்கிளர்குவவுத்திண்டோண்மாறுகொண்டெழுந்துநின்ற
பொற்கிரிதிரித்துச்செஞ்சேற்பொறித்து வெம்புலிகான்போ
க்கி, விற்கொடிதடிந்தோனும்பர்விண்ணுவீழ்ந்திருந்ததன்ன
கொற்கைகாவலவன்முந்நீர்க்குமரியந்துறையினானே. (௩)

செருமுகத்தேற்றதெவ்வர்செம்மலரகலம்போழ்ந்து
சொரிபசுங்குருதிமாந்திச்சுவைத்திடுநிணம்வாய்பில்கி
யெரியுமிழ்ந்திலங்குவேலானிருநிலவரைப்பின்மன்னர்
குருமணிமௌலிதேய்க்குங்குரைகழற்றுளினானே. (௪)

மழைக்கருந்தடங்கணல்லார்வனமுலைக்கோடுமூழ்கி
யுழக்கலினுடைந்துபைந்தேனூற்றிருந்தொழுகுந்தாரான்
பழுத்தமுதொழுகுந்தீஞ்சொற்பயிலுநாவலவராய்ந்து
கொழித்ததீந்தமிழ்க்கூட்டுண்ணுங்கூடலம்பதியினானே. (௫)

முடிவிலாவுலகின்மன்னர்முடித்தழும்பிருந்ததாளாற்
படுதிரைசுவற்றிநீலப்பனிமுகிலுடைநின்வீக்கிக்
கடிமலர்முருகுவிம்முங்கற்பகநீழல்வேந்தின்
சுடர்விரிபசும்பொன்மோலிதொடியினாற்றுகள்செய்தானே.

மோட்டிளமுகையிற்றேன்றிமுருகுகொப்பளிக்குமன்றற்
றோட்டுமென்கமலவாவித்துறைதொறுமெழுந்துதுள்ளிப்
பாட்டிளவண்டுமூசப்பாளைவாய்க்கமுகினெற்றிச்
சேட்டிளங்கயல்கள்பாயுஞ்செந்தமிழ்நாட்டின்வேந்தே. (௭)

கந்தடுவெகுளிவேகக்கடாக்களியானைமன்னர்
வெந்திறல்விளக்கலாற்றுவெருண்டுதாமகளிரென்னப்
பந்தொடுபாவைநல்கப்பனிமதிக்கவிகைநீழ
லுந்துநீர்ஞாலங்காக்குமுக்கிரனென்னுங்கோவே. (௮)

பாடல்வண்டார்த்துமூசப்பச்சிளந்தென்றறாற்றுந்
தோடலர்கடம்பினீழற்சுடரிழையொருபாலாகக்
கூடலம்பதிவாழீசன்குரைகழலிலங்குநோன்று
ஞெடொறுஞ்சென்றுருநகைமணிமுடியினனே. (௯)

ஆயவனொருநாட்டெண்ணீரலைகடன்முகட்டிற்றோன்றிப்
பாயிருட்பிழம்புசீக்கும்பல்கதிர்ப்பரிதியன்ன
சேயொளிமௌலிதாங்கித்திருமணிக்குழைவில்வீச
மாயிருஞாலம்விற்குமணிகிளர்வலயமின்ன. (௧௦)

அதிர்திரைக்கடலிற்பட்டவலம்பொளிபாரத்தோடும்
பொதியினிற்பிறந்தவாரம்பொலிவுறுமலங்கன்மார்பிற்
றதைமலர்ப்பாரிசாதத்தண்ணிழலுறையும்வேந்தின்
கதிர்மணியாரந்தாங்கிக்கனகழல்வீக்கினனே. (௧௧)

ஆழ்கடல்வரைப்பிற்றெவ்வருவரையகலம்போழ்ந்த
போழிறைபடிவண்டோச்சிப்பொருந்திறற்கூற்றமஞ்ச
ஆழிவெங்கனலிற்சீறியுருமெனவுரறியார்க்கு
மேழுயர்களிநல்லியானையெருத்தமேற்றோன்றினனே. (௧௨)

விண்ணுறநிவந்தகோட்டுமேருமால்வரையிற்றீட்டு
மண்ணலஞ்சுறவுவாய்த்தவாடலம்பதாகையோங்கத்
தண்ணிலாக்கவரிக்கற்றையிருபுடையெழுந்துதாழக்
கண்ணகன்ஞாலங்காக்குங்கடவுள்வெண்குடைநிழற்ற. ()

பாய்திரைக்கடலிற்பட்டபானிறப்பகுவாய்ச்சங்கஞ்
சேயுயர்விசும்பினூடுதிசைமுகங்கிழியவார்ப்ப
மீயுயர்குடுமிக்குன்றமிசைதவழ்கமஞ்சூற்கொண்டல்
வாய்திறந்தார்ப்பதென்னமண்கணைமுழவுவிம்ம. (௧௪)

நகுமணிச்சுட்டராவினனந்தலைக்கிடந்தஞாலத்
திகல்பெறுவாகிநம்மேலெழுந்தனபோலுமென்று
பகலவன்பசும்பொற்றேரிற்பாய்பரிவெருவியோட
வகலிருவிசும்பிற்றூவுமலங்குளைப்புரவிசூழ. (௧௫)

படர்சிறையரிந்துவென்றபழம்பகைதீரவேண்டி
மிடல்கெழுமன்னர்ச்செற்றவெந்திறற்குலிசவேந்தின்

சுடர்முடி தூளியாகத்தொடியெறிகொற்றநோக்கித்
தடவரையடைந்தபோலத்தறுகண்மாலியானைசெல்ல. (௧௬)

எரிசுடர்க்கற்றைகக்குமிலங்கொளிப்பரிதிபொற்றேர்
விரைதருகலினமாவின்வெந்தழலாற்றுமாபோற்
கருவிவானகடுநீண்டுகதிரிளநிலவுகான்ற
குருமணிக்கொடிகளாடுங்கொடிஞ்சிமான்றடந்தேர்சூழ. ()

வாளமரழுவநீந்திமற்பழுத்துயர்ந்தவிங்கு
தோளினர்திருவில்வீசுந்தொடுகழனரலவார்த்த
தாளினர்முருகுவிம்முதண்மலர்த்தொடையன்மார்பர்
கோளரியேறுமானுங்கொலைத்தொழிலிளைஞர்சுற்ற. (௧௮)

எரிமணிக்குன்றஞ்சேர்ந்தமரகதவல்லியேய்க்கு
மருள்சுரந்துலகமீன்றவங்கயற்கண்ணிபாகம்
பிரிவிலனினிதுவாழும்பிறைக்கொழுந்தணிந்தபெம்மான்
மறைமலரனையபொற்றாள்வணங்குவானேகினானே. (௧௯)

புண்ணுறுபுலவுவேலான்புதுநறவுயிர்க்கும்புன்னைத்
தண்ணறுங்காவினெல்லைசார்ந்துழித்தறுகட்சீற்றத்
தண்ணலங்களிநலியானையாடல்வெண்கோடுபாய்ந்து
மண்ணகங்குழைப்பநீலவரையெனவீழ்ந்ததன்றே. (௨௦)

கொலைமதத்தறுகணியானைகோடுமண்குழிப்பவீழ்ந்த
நிலைமைமற்றென்கொலென்றுமன்னவனினைக்குங்காலை
மலைமகள்சாபந்தன்னாற்புலையுருமணிக்கிரீப
னலைகடன்ஞாலங்காக்குமரசன்முன்னெய்தினானே. (௨௧)

வார்கழலிலங்குநோன்றாள்வந்துமுன்னிறைஞ்சிநிற்பக்
கூரிலையலங்கல்வெள்வேற்கொற்றவன்குறித்துநோக்கி
யாரைநீயென்னலோடுமாய்வனந்திருத்தியீங்குச்
சேர்தருபுலையனென்றேசெப்புவான்றொடங்கினானே. (௨௨)

கொற்றவாவீங்குநாகக்கொய்மலர்க்காவொன்றுண்டான்
மற்றதனிடையேதோன்றிவானுறநிவந்துநின்ற
புற்றினையெறிதலோடும்பொறிவரியரவின்றன்வா
லற்றிடவொன்றுதோன்றிற்றதன்றிறமுரைப்பார்யாரே. ()

கள்ளுயிர்த்தலர்ந்தகொன்றைக்கடிமலர்க்கண்ணியண்ணல்
வெள்ளெயிற்றரவமாதல்வேண்டுமென்றுரைத்தலோடு
மள்ளிலையலங்கல்வேலானுங்கதுகாட்டுகென்னு
வள்ளுறைநகழீஇயவொள்வாள்வயவரோடேகினனே. (உச)

போயவன்முருகுவிம்முபுன்னையம்பொதும்பர்நீழற்
சேயுயர்புற்றின்பாங்கர்ச்சிவலிங்கமொன்றுகண்டா
னுபேருவகைவெள்ளமலையுவட்டெடுத்துப்பொங்கத்
தூயவாளரவங்கோட்டசுனையினீராடச்சென்றான். (உரு)

தேனுடுசுரும்பும்வண்டுஞ்செவ்வழிபாடவின்டு
கானுலாம்பசுந்தேன்மல்குங்காவிபஞ்சுனைநீராட
மீனவேறுயர்த்தவண்ணல்மேவினனின்றகாலை
வானிடையெழுந்தோர்தெய்வம்வாய்விட்டுமொழிந்ததன்றே

கொங்குலாமலர்தூயேத்தக்கூடலம்பதியினுளும்
பொங்கியவுவகையோடுபோதருவருத்தநோக்கி
யங்கயற்கண்ணியோடுமாலவாயமர்ந்தவண்ண
லிங்கெழுந்தருளிநின்றானிருநிலம்புரக்குங்கோவே. (உஎ)

கோல்வளையுமையாளோடுகூரெயிற்றரவவேந்தர்
மேலைநாளன்புமுற்றிமெய்த்தவம்புரிதலாலே
மாலொருபாதியாகிவயங்கிடவடிவுவிண்டோ
யாலமர்கடவுள்காட்டியருளியதலமுமீதால். (உஅ)

இன்னிளந்தென்றல்வாழுமிவ்வனமுருகுவிம்மு
புன்னையம்பொதும்பரென்னப்புகல்வரிப்பொதும்பர்வாழு
மின்னவிர்சடையினானைவிதிமுறையருச்சியென்னுச்
சொன்னவைகேட்டலோடுமகிழ்ந்தனன்சுடர்செம்பூணான். ()

ததைமலர்க்குவளைபூத்ததண்சுனைப்புனலின்மூழ்கி
மதிதவழ்ப்பசும்பொற்கோட்டுமலயச்செஞ்சாந்துமன்றற்
புதுநறும்போதுமேந்திப்புன்னையம்பொதும்பர்வாழுங்
கொதியமழற்சூலமேந்துங்குழகனைவழிபட்டானே. (௩௰)

மற்பகமலர்ந்ததிண்டோண்மன்னவன்மகிழ்ச்சிகூர்ந்து
சிற்பநூற்றுறைபோயுள்ளந்தெளிவுறுதச்சர்க்கூவிப்

பொற்பிதிரவிழ்ந்ததண்பூம்புன்னையம்போதும்பரெல்லாங்
கற்பகநாடுநாணக்கடிநகராக்கினனே. (௩௧)

வானகடுருவிநீண்டமணிமதிற்பரவைமேய்ந்த
நீனிறக்கொண்டலூழநிவந்தமண்டபங்களோங்கு
கூனிளந்திங்கடேய்க்குங்கோபுரந்திகழ்ந்துதோன்றத்
தேனுலாங்கொன்றையார்க்குச்சினகரமியற்றினனே. (௩௨)

ஒண்ணிறப்பசும்பொன்னூழியொளிபரந்திமைத்தலாலே
கண்ணினிற்பொலியுந்திண்டேர்காண்டகவியற்றல்செய்து
தெண்ணிலாவேணியார்க்குச்சித்திரைத்திங்கடன்னில்
விண்ணவரிறைஞ்சியேத்தவிழாவினைநடத்தினனே. (௩௩)

விடம்பொழியரவுபோற்றவீறுசால்கூழைவாழு
மடந்தைபோர்பாகன்பொற்றாள்வைகலும்வந்துபோற்றி
யடங்கலர்ச்செருக்கும்வேலானளப்பருங்காலம்வைகி
யுடம்பொடுமழிவிலாதவுயர்கதியெய்தினனே. (௩௪)

பொருப்பிளங்கன்னிசாபம்பொருந்தலாற்புலையனாகி
மருந்துணர்விரிந்தபுன்னைவனத்துறைமணிக்கிரீபன் [ன்ன
விரைத்துணரிதழிவேய்ந்தோன்வெள்ளிவெற் படைந்தான்பி
றொருத்தியுமாங்கண்வைகியுயர்கதியெய்தினளே. (௩௫)

உக்கிரன்வழிபடுசருக்கமுற்றிற்று.

ஆக செய்யுள் - ௩௬௪.



## தக்கணைதவம்புரிசருக்கம்.



என்னலுமுனிவரெல்லாமீறிலாவுவகைபூத்து
முன்னூநான்முழுதுந்தேர்ந்தமுனிவனைவிரும்பிநோக்கி
யன்னவள்வீடுபெற்றதன்மையையறைவாயென்னத்
தொன்னெறியுணர்ந்தசூதன்சொல்லுவான்றொடங்கினனே.

வேறு

மதுநறுந்திவலைபருகுவான்வீழ்ந்துமழலையஞ்சுரும்பர்பா
ட்டயரப்,பொதியவிழ்கமலப்பொய்கைசூழ்பிரமபுரத்தினின்

முடிவிலாவேத, விதிபயில்விண்டுசெருமனென்றுளனேர்வே
தியனங்கவன்றனக்குத், ததைமலர்க்கூந்தற்றக்கணையென்
றோர்தனேயையுண்டணங்கெனத்தருவாள். (௨)

புத்தமுதனையாள்வடிவுகேட்டிருகிப்புட்கரசன்மனென்
றோது, மெய்த்தவமறையோன்விருப்புறுபுதல்வன்விரிபுனற்
காசிநாடகன்று, சத்தியகீர்த்தியென்பவனன்னுடந்தைதனடி
யிணைதொழுது, மெத்தலேங்கின்றுவந்தனைபெயரென்னிசைக்
கெனவிசைத்தனனன்றே. (௩)

சொல்லலுமந்தமறையவன்றனக்குத்துவர்படுதொண்டை
யங்கனிவாய், முல்லைவெண்முறுவற்புதல்வியைவேதமுறை
யினிற்கடிமணம்புணர்வித், தல்லியங்கமலத்தாரினுன்றனக்
கோரரும்பெறற்புதல்வரின்மையினு, லில்லறம்புரிதியென்ற
வன்றனைத்தன்னில்லிடையிருத்தினன்றுறந்தான். (௪)

அங்கவன்மகிழ்கூர்ந்தங்கலுழ்மேனியணங்கனுள்புதுநலங்
கவர்ந்து, திங்களொன்றிருந்துமாண்டனனென்றுசெப்பலு
மிருந்தவத்தோர்கள், பொங்குவெம்முலைபாளிளமையிற்கை
மைபொருந்துறக்கடிமணம்புணர்ந்த, கொங்கலர்தாரானிள
மையினிறத்தல்கூறெனக்கூறுவான்சூதன். (௫)

முற்பிறப்பதனிற்றத்தரிநெடுங்கண்முகிழ்முலைத்தக்கணை
யென்பாள், சொற்புனைகவிஞனுகுமாற்றனதுதுவர்படுதொ
ண்டையங்கனிவாய்க், கற்புடைமனையாள்காதல்கூர்திருப்
பக்கணிகையர்ப்புணர்ந்ததீவினையாற்,பொற்பினிற்பொலிந்த
பெண்பிறப்படைந்துகைமையைப்பொருந்தினளன்றே. (௬)

வானவனொருவன்றேவியுந்தானுமுயலுருத்தாங்குபுமணப்
ப, வூனவாய்த்தேவனுயிர்செகுத்திடலுந்தேவியாங்குரைத்த
சாபத்தாற், கானுலாமலங்கற்சத்தியகீர்த்திகதிரிளவனமுலைக்
கயற்கட், டேனவாங்கிளவித்துணைவியோடின்பந்திளைத்திடு
காலையிலிறந்தான். (எ)

கைமையுற்றுருகுந்தக்கணைவிடங்கண்கலுழ்ந்தனள்புலம்
புறுகாலை, மெய்மைநூறெளியுங்காலபுனென்னும்விழுந்தவ

ன வ்வயின் மேவி, யிம்மையேயன்றெலெழுபிறப்படையுங்கை
மைநீயிரங்கலென்றேக, மம்மர்நோய்தவிர்ந்துபுண்ணியநதி
களாடிவான்மனக்கொடிபோனுள். (அ)

தெளிபுனனதிகள்பற்பலதோய்ந்துதெளிந்திலனுள்ளமா
தலினுற், றளிமுகிறவழுஞ்சந்தனச்சாரற்றடவரைக்குறுமு
னியுள்ளங், களிகொளவுறையுந்தென்றிசைபெழுந்துகடிமல
ர்முருகுகொப்பளிக்கு, மளிமுரல்புன்னைவனத்தினிலடைந்
தாளகன்றதுமனந்தமுக்கன்றே. (௯)

மனவிருளகற்றுந்தன்மையானீலமணிமிடற்றிறைவன்வா
ழ்பதியி, னினமலர்ப்புன்னைவனத்தினுக்கிணையொன்றிலதெ
னவெண்ணிவாளரவச், சுனையினீர்படிந்துவற்கலையுடுத்துத்
தூயவெண்ணீற்றணிதுலங்க, வினையிருள்கடியுமஞ்செழுத்
துணர்ந்துமெய்த்தவம்புரிந்தனள்மன்னே. (௧0)

மற்றவள்கனவின்மழுவலான்றேன்றிமதிநுதன்மன்னு
மோர்பிறப்பி, னுற்றதோர்குழவியாகமற்றேழாம்பிறப்பினி
லோரெழுபுதல்வர்ப், பெற்றபினீங்குவந்துயர்வெள்ளிப்பிற
ங்கல்சென்றடையெனவருளாற், சொற்றவைகேளாவவ்வழி
யகன்றுதுஞ்சினடுவரிதழ்மடவாள். (௧௧)

என்னலுமுனிவர்சூதனைநோக்கியீறிலாநான்முழுதுணர்ந்
தோய், மின்னெனநுடங்குநுண்ணிடைக்கனிவாய்மெல்லிய
லிருந்தவம்புரிந்தும், துன்னியபாவந்தீர்ந்திலவாகித்தொடர்ந்
தவைகூறுவாயென்னத், தன்னிகரில்லாச்சூதமாமுனிவனத்
திறஞ்சாற்றுவான்சமைந்தான். (௧௨)

முத்தியைவிளைத்தல்கருமமேயென்றுமுழுதுணர்ஞான
மேயென்று, மித்திறமுலகமுரைக்குமற்றன்றெலியற்றுநல்
வினையினுற்றெளியுஞ், சித்தமங்கதனுன்ஞானம்வந்தெய்திச்
செல்கலாமுத்திதந்திடுமென், றுய்த்துணர்வுடையோருரை
ப்பராலெண்ணிலுண்மைநூற்றெளிவுமற்றஃதே. (௧௩)

கருநெறிபயின்றகுழலினர்க்குள்ளங்கனிவுறுகாதலர்க்கே
வல், புரிவதேவிதித்தகருமமங்கதனைப்புரிந்திடப்பெற்றிலள

தனு, லரியதோர்வீடுபெறுவதற்குரியளல்லளாயழுங்கினள் பின்னர்ப், பிரசாரண்மலர்ப்பூம்புன்னையம்பொதும்பர்ச்சேர் தலாலுயர்கதிபெறுவாள். (கச)

என்றலுமுனிவராங்கவள்பெற்றவண்ணநீயிசைத்தியென் றியம்ப, நன்றெனச்சூதனருந்தவத்தோர்கணகைமுகநோக் குபுபிறவி, யொன்றிலோர்குழவியாகமற்றேழாம்பிறப்பினி லோரெழுபுதல்வர், மன்றலங்குழலாளின்றுயர்புன்னைவனத் தில்வந்தடைந்தனள்மன்னோ. (கரு)

வந்தனளீசன்குரைகழல்வணங்கிமாதவம்புரிந்தனளிருப் ப,விந்துவார்சடிலத்திறையவன்வெளிப்பட்டென்கொனீவே ண்டியதென்னத், தந்திடவேண்டுவதுதொல்லுலகமென்ற னள்தந்தனனென்னச், சிந்தரிநெடுங்கட்டேமொழிமடவாள் சேயுயர்கயிலைசென்றடைந்தாள். (கசு)

தக்கணதவம்புரிசருக்கமுற்றிற்று.

ஆ செய்யுள் - ௩௮௦.

# வீரசேனன்பிணிதீர்ந்தசருக்கம்.

என்னமுனிவர்மகிழ்தூங்கியிணர்வாயவிழ்ந்துமட்டுயிர்க் கும், புன்னைவனத்தின்வீறின்னம்புகல்வாயென்னமாதவத் தோர், சொன்னதன்மைமனக்கொண்டுதுகடீர்கேள்விச்சூத முனி, மின்னினகுசெஞ்சுடரிலைவேல்வேந்தன்கதையொன் றுரைசெய்வான். (க)

வெண்ணாந்துயிர்த்தகதிர்முத்தம்விளங்குமரங்கத்தரவ ணைமேல், வண்ணங்கரியமுகில்காட்டும்வாயுமுகமுங்கருணை பொழி, கண்ணுங்கமலமலர்காட்டுங்கண்ணன்றுயிலுங்கா வேரித், தண்ணந்துறைவண்புனலுடன்றமிழ்தேருறந்தை காவலனே. (உ)

ஒளிரும்வடிவாள்விதிர்த்திடும்போருழக்குமருவாருரம்போ ழ்ந்து, குளிரும்பரவைத்திரைசிவப்பக்குருதிப்பெருக்காறெ

டுத்தோடப், பிளிறுமுருமுக்குரற்பனைக்கைப்பிறைவெண் கோட்டுப்பாவடிய, களிறுதொலைத்துழுவெயில்சூழ்கலிங்க மெறிந்தகதிர்வேலான். (ரு)

திரைசெய்கடற்பார்பொதுநீக்கித்திங்கட்கவிகைதனிநிழற் று, மரசர்க்கரசன்மனுதுங்கனபயனடல்வேலகளங்கன், குரைசெய்வரிவண்டொருகோடிகொழுதிநறவு கூட்டுண்ணும், விரைசெயலங்கற்றடமார்பன்வீரசேனனெனும்வேந்தன். ()

அமர்வேட்டெழுந்ததிணிதடந்தோளபயனொருநாளரையிருளிற், றமியனுகவெழுந்துநகர்த்தன்மைதேருங்காலையிரு, டுமியமின்னியதிர்ந்து கமஞ்சூல்வான்பொழிய விதிர்விதிரா, வுமிழுங்கைவேலவன்மறையோனொருவன் மனைவாய்ச்சென் றடைந்தான். (௬)

வேட்டுமுத்தீநெறிவளர்க்குமெய்நான்மறையோன்றென்புலத்தோர்க், கூட்டக்கொணர்ந்ததீங்கனியையுடற்றுபசியாற்றருகென்னக், கேட்டபொழுதின்வேந்தனெனக்கிளர்ந்தவுரையாலறிந்துதவத், தோட்டுமலர்த்தாரடல்வேந்தன்றுய்த்துக்கோவில்சென்றடைந்தான். (சு)

சுடர்வேற்காளைவரல்கண்டுதொழுதுநெஞ்சந்துண்ணென்று, வடமீன்புகழுமருங்கற்பின்மதர்வைநோக்கின்மணிமுறுவற், படவாளரவப்பைத்தனையபரவையல்குற்பணைமென்றோட், கொடிசேர்மருங்கினவன்றேவிகுறித்தோர்மாற்றங்கூறுவளால். (எ)

மன்னர்மகுடநிரையுழுதுவயங்குகழற்காலகளங்கா, வென்னைகளங்கமுற்றனைகொ லெழுதாமறையின் றுறைபோய, பொன்னங்கமலத்தார்மார்பபொருள்வவ்வினைகொல் பிழைபுரியக, மின்னினகுவேல்வேந்தர்தமைவெகுண்டுகொலைசெய்தனைகொல்லோ. (அ)

அருள்பார்த்திருக்குங்தொல்குடிகளலமுற்றிரங்கவாறின்றிப், பொருள்வேட்டனைகொல்புராணநவில்பொழுதுபொய்மையிதுவென்ன, மருளானிகழ்ந்துகூறினைகொன்மதிசேர்ச

டையானடிபரவு, மிருடீர்மனத்தார்தமக்கின்னலிழைத்தி
கொல்லோவெனப்புகன்றுள். (கூ)

மருவாரலங்கற்றடமார்பன்மடந்தைமதிவாண்முகநோக்கி,
நிரைவால்வளைக்கையணங்கனையாய்நெருநலிரவு மறைநெறி
யா, யொருநான்மறையோன்றென்புலத்தோர்க்கூட்டக்கொ
ணர்ந்ததீங்கனியைத், தருவாயென்னவெழுந்தபசிதணிப்பா
ன்வாங்கியருந்தினனால். (கo)

மணநாறிதழிப்பூந்தொடையுமாலைமதியுமணிச்சூட்டுப்
பணவாளரவுமுடித்தசடைப்பரமன்முதலாங்கடவுளருக்
குணவாமதனையறிந்திருந்துமுண்டவதனுலுள்ளுருகித்
தணவாவுடலம்பிக்குற்றேன்றவிர்க்குந்திறனுங் காணேனால்.

கறைசேர்மிடற்றுன்கடவுலகங்காட்டுமூர்த்தி மலர்க்கடவுண்
மறையோரிவர்தம்பொருள்கவர்ந்துதுய்த்தவஞ்சரொருநாலு
பிறைவிவளைவான்ஞமலியாய்ப்பிறந்துபின்னர்நரகத்தி, லு
றுவாரென்னவருத்துரைத்தாஞேடாத்தானை விறல்வேந்தே.

தேவிகேளாமனநடுங்கித்தெருமந்தினியென்செய்துமெனக்
காவிநெடுங்கண்ணீர்வாரக்கலங்கியயர்கூர்ந்தனளிருப்ப
வாவும்பரிமான்றேர்க்கிள்ளிவருகவென்றுதிறலமைச்சர்க்
கூவியுற்றபிணிதீர்ப்பான்குறிப்பினவரோடாய்ந்தனனால். ()

ஆய்ந்துசிருபர்சிகாமணியென்றறைபும்புதல்வன்றணையரு
ளாற், பாந்தண்முடிமேறகிடந்தகடற்பரவைஞாலம்பரித்தி
யெனப், பூந்தண்மாலைமுடியிலைச்சிப்புலவுகமழுங்கூரிலைவே,
லேந்தலுற்றவுன்மத்தந்தீர்ப்பானெண்ணியெழுந்தனனால். ()

செய்வாயொழுகுமழற்றிகிரிநெடியோன்றலங்கள்பலபணி
ந்து, வெவ்வாய்வடிவேற்றிறற்கிள்ளிமீட்டும்விரிபூந்துளவமு
கில், பெய்வான்முகில்போன்மணிமேனிபிறழத்துணைக்கட்
கமலமலர்ந், தைவாயரவிற்றுயில்கின்றவநந்தபுரஞ்சென்ற
டைந்தனனால். (கரு)

விங்குபுனிதநீர்படிந்துவிரைசேர்பசும்பொற்றுணர்தூவி
வாங்குகடல்சூழ்மண்ணளந்தமாயனடித்தாமரையிறைஞ்சி

யாங்குந்தன துன்மந்தநோயகலாமையினுன் மீள்கின்றுன் [ன்
றேங்கொளரும்புகதிர்முத்திற்றிகழும்புன்னைவனஞ்சேர்ந்தா

வார்ந்துபசுங்தேனூற்றிருந்துவழிபுநறுந்தண் மலர்வனத்தி, லீர்ந்தபளிங்கிற்றெளிகின்றவெறிநீர்ச்சுனையினிடைமூழ்கி, யார்ந்தவிடத்தாலிருண்டமிடற்றண்ணலடித்தாமரையிறைஞ்சித், தேர்ந்தகேள்விச்சிவசன்மனுறையுமில்லஞ்சென்றடைந்தான். (௬௭)

எய்தாவிருப்பாள் மறைக்கிழவனிணைத்தாட்கமலமலர்பரவி, மைதோய்புன்னைவனத்தியல்புவகுத்துமொழியவேண்டுமெனப், பொய்தீர்கேள்வித்துறைபோயவந்தணாளன்புலவுகமழ், நெய்தோய்வடிவேலகளங்கனெஞ்சங்களிப்பவுரைசெய்தான். (௬௮)

உரைத்தலோடுமுள்ளுருகியுடலுஞ்சிலிர்த்தகிறலாழி, தரித்தோன்றனைமுன்வழிபட்ட தவத்தாற்குழைந்து மூவெயிலன், றெரித்தோர்க்கன்புற்றஞ்செழுத்தினியல்புமனத்தினிருடீர, விரித்துகவிலவேண்டுமெனமெய்ஞான்மறையோனுரைசெய்வான். (௬௯)

தேறுபுனல்வார்சடைகரந்ததேவனுனுமஞ்செழுத்தின், வீறுதெரிந்துநூறுண்டுவிரித்துமொழிதற்கரிதாமா, றுறுகமலத்தவன்முதலோரின்னுமறியார்நானறிந்து, கூறுந்தன்மையுடையேன்கொல்குவவுத்திணிதோட்கோவேந்தே. (௨௦)

இன்னதாயவஞ்செழுத்தின்றன்மைதன்னையித்தலத்திற், றென்னன்பொருப்பின்வீற்றிருக்குந்தெள்ளுதமிழ்மாமுனிவர்க்கு, முன்னம்பகர்ந்தான்புரிசடையோன்முனியுந்திங்கடொறும்வந்து, பொன்னந்துணர்தாயிறைவனடிபோற்றிவழிபட்டேகுவனுல். (௨௧)

பரிதிவெயிலாற்பாயிருள்போம்பான்மையென்னப்பண்டுநான், புரியும்வினைவல்லிருளெல்லாம்புறந்தந்திரியவாங்கதனைந், தெரியுந்தமிழ்மாமுனியெனக்குத்தெரியவுரைத்தான்.

றிறல்வேந்தே, யரியதவமாற்றினனினக்கின்றதனலறையப் பட்டதால். (உஉ)

கறங்குபரவைக்கடற்றுயிலுங்கண்ணன்முதலாங்கடவுளரு ணறுந்தண்கொன்றைமாலேபுனேநம்பன்சிறந்ததகைமையா லறிந்தோர்பரவுமந்திரங்களனைத்தினுள்ளுமஞ்செழுத்தே சிறந்ததாகுமென்றென்றுஞ்செப்புந்தெய்வநான்மறையே. ()

முருகுகமழும்பசுந்தேறன்முகைவிண்டொழுகுநறுங்கொ ன்றை, யரவுபுனேயும்புரிசடிலத்தண்ணலுருவாமஞ்செழுத்தி ன், வருணநான்குந்தோற்றிடவான்மக்கட்கதியின்வந்துதித் தும், பரவுந்தகையவஞ்செழுத்தின்பான்மையறியார்விலங் காமால். (உச)

எண்ணின்மறையின்றெளிவாயவெழுத்தஞ்சறியாரிருங்க டல்சூழ், மண்ணினடக்குஞ்சவமாகுமவனைக்காணில்மறை யோரை, விண்ணினிருள்சீத்தெழுங்கதிரைவெய்யகனலிதனே ப்பசுவைக், கண்ணிற்காணவேண்டுமிவைகாணுன்பதிதனு வானே. (உரு)

அறத்தின்வழியேயனல்வேள்வியனைத்துமாற்றியொருநா லு, பிறப்புமேலாம்வேதியனுப்பிறந்தார்க்கன்றிப்பெறலா கா, நறைப்பூங்கடுக்கைமாலைபுனேநம்பனடித்தாமரைக்கன்பு ஞ், சிறப்பினுயர்ந்த வஞ்செழுத்துந் தெரியக்கேட்குஞ்சிந் தையுமே. (உசு)

புலையனெனினுஞ்செந்நாயின்புலால்வாய்மடுப்போனு னுலு, மலர்தார்வேணியண்ணலெழுத்தஞ்சுமறிந்தான்முனி வனு, மலர்பூங்கமலத்தொடைபுனேயுமறையோனெனினும றியாதா, னுலகிற்புலையனெனவேபுரைக்குங்கடவுணன் மறையே. (உஎ)

காசிபிரயாகைகாளத்திகாஞ்சிநைமிசாரணிய
மாசின்மதிதோய்முதுகுன்றஞ்சித்தாச்சிரியமறைக்காடு
வீசுதென்றறவழ்மலையங்கும்பகோணம்வேணுவன
மூசியளிகளொருகோடிமொய்க்குங்கடம்பவனந்தில்லை. ()

என்னுந்தலத்தினைந்தெழுத்தையிரைந்தாண்டுநவின்றபல ன், புன்னைவனத்திநொருநான்றுபொருந்திப்புகலிற்பெறலா மாற், பன்னும்பழநான்மறையோர்க்குப்பகரற்பாற்றோவுள முருகி, யன்னவனத்திலெஞ்ஞான்றுமமர்ந்துநவில்வோருறு பேறே. (௨௯)

வழுத்துந்தகையவத்தலத்தின் மறைநூற்றுறைபோங்குர வனுமை, யெழுத்தஞ்சவன்பாற்கேட்டறிந்தோரியாண்டுச் சென்றுதுஞ்சிடினுங், குழைக்குங்கடுக்கைப்பொலந்துணரு ங்குளிர்வெண்டிங்கட்பசுங்கொழுந்துஞ், சுழிக்கும்புனற்செ ஞ்சுடர்மௌலித்தொல்லோன்கயிலையடைவாரே. (௩௦)

மஞ்சுதவழுநறும்புன்னைவனஞ்சேரிந்தத்தலத்தினெவர், துஞ்சும்பொழுது மழவிடைமேற் றுவர்வாயுமையி னொடுந் தோன்றி,நஞ்சுபொதிந்தமணிமிடற்றுநம்பனவர்தஞ்செவியி னெழுத், தஞ்சும்புகல்வனுங்கவர்பேற்றையறையற்பாற்றோ வடல்வேலோய். (௩௧)

அலர்பூஞ்சினைய்புன்னைவனமடைதுமென்னமனங்குழை ந்து, புலரியெழுந்தோரடியிடினும்புரிந்தவினைவல்லிருளெல் லா, மிலகுபசும்பொன்கொழித்துமணியெறிந்துமுழங்குதி ரைக்கங்கை, மலிபூம்புனல்சூழ்வடகாசிவைகும்பெரும்பேற டைவாரே. (௩௨)

பிள்ளைமழலையளிபரந்துமிதிப்பக்கிளர்ந்துபிறங்கிணரின், கள்ளுவழிபுநறும்புன்னைக்காவுசூழ்ந்தவித்தலத்தி, னுள்ளங் குழைந்தோர்பிடியேனும்வறியார்க்குதவிநொளிவயிரந்,தெள் ளுநறவந்திசைதிசைபாய்செழும்பொற்கயிலைசென்றடைவார்

என்னமறையோனியம்புதலுமெறிநீர்த்தரங்கக்கருங்கடற் பார், மன்னன்வணங்கியினியக்கமணியின்வீறுவிரித்தெனக் குப், பன்னவேண்டுமெனப்பகரப்பவளச்செவ்வாய்ப்படர்சி ன்றைய, வன்னமுயர்த்தமறைக்கிழவனனையோன்கூறத்தொட ங்கினனால். (௩௪)

ஆற்றற்கரிதுமூவெயில்வாளவுணர்க்கினியென்றறைந்தம
ரர், போற்றியருள்வாயெமக்கென்னப்பொன்னங்கமலத்தா
டொழுது, மாற்றற்கரியவெந்துப்பினகோரப்படையைமனத்
துணரா, வேற்றுக்கொடிமீதுயர்த்ததனியிறைகண்முகிழாதி
ருந்தனனால். (௩௫)

சுழிக்குமரவம்புனற்கங்கைசூடும்பவளச்சடைமுதல்வன்
விழிக்குங்கமலமலர்க்கண்ணீர்விழுந்தநிலத்தினிடைநின்றுந்
தழைத்ததருவின்மணியானதன்மையான்மற்றாங்கதனை
வழுத்தற்கரியவக்கமணியென்னுங்கடல்சூழ்வையகமே. ()

போற்றற்கரியவெண்ணிறத்தபொன்மைநிறத்தவிருநிறமுந்
தோற்றத்திகழ்வகருநிறத்தவாயதுகடூர்தருமணிகள்
சாற்றுமறையோர்முதலானசாதிநான்குமாமென்பர்
கூற்றமடர்ந்துகொலைபுரியுங்குருதிகாலுங்கூர்வேலோய். ()

ஒற்றைமுகத்தமணியணியினுடன்றுசினத்தாற்கொன்றவு
யிர், செற்றபாவந்திருமுகமிரண்டிற்சிறந்தமணியணியி, னற்
றதாகும்பசுவினுயிரட்டவினைமும்முகத்தமணி, முற்றவனி
யின்மகளிருயிர்முடித்தபாவந்தொலைந்திடுமால். (௩௮)

பொருந்திநான்குமுகத்தமணிபூணினுறுவர்க்கொன்றவி
னை, யிரிந்துசாயுமைந்துமுகமிலங்குமணிகள்விளைந்தணியி
னருந்தாததனையருந்துவினையகலுமாறுமுகத்தமணி, தெரிந்
துபுனையிலந்தணனைச்செகுத்தபாவந்தீர்ந்திடுமால். (௩௯)

ஏழுமுகஞ்சேர்ந்திலங்குமணியிலங்கவணியிற்பிறர்க்குரி
ய, மாழைகவர்ந்தவினையகலுமெட்டுமுகத்தமணியணியிற்,
சூழுங்குரவற்கிழைத்த வினைதொலையுமுகமொன்பதுதிகழு
ங், கேழ்சேர்தெய்வ மணியணியிற் கேடில்செல்வம்பெற
லாமால். (௪௦)

சீர்சால்பத்துமுகத்தமணிதெரிந்துபுனையிற்பேயினிடர்,
வாராதாகும்பதினொன்றாய்வயந்துமுகத்தமணியணியி, னோ
ராப்பொருள்களனைத்தினையுநேரும்வேள்விப்பலனுண்டா, மீ
ராறாயவக்கமணியணிவார்முத்தியெய்துவரால். (௪௧)

இவ்வாறுயவக்கமணிக்கணியுமிடனுமிறையவனும், வெவ்
வேறென்பாரறியாதார்விரிவெண்ணீலவுப் பசுங்கொழுந்து,
மொவ்வாதெனநீறிலகுமுடன்முழுதுமணியாயணிகுவனேற்
செவ்வான்மதியங்கிடந்தசடைத்தேவேயிறைவனுகுமால். ()

வேறு.

என்றுகூறலுமிருநிலமன்னவனிறைஞ்சி
நன்றுசொற்றனேநீற்றதுதன்மையைநவின்று
துன்றும்வல்வினைத்தொடர்ச்சிதீர்த்தருளெனத்தொழலுங்
கொன்றைவேணியர்க்கன்புறுமறையவன்கூறும். (சங)

கூற்றடர்ந்தபூங்கழலினன்கோயில்வெண்ணீறும்
போற்றும்வேள்விசெயந்தண்பொங்கழனீறுந்
தோற்றமேவியமறையவன்றுறந்துசெல்காலை
யாற்றுமோமவெண்ணீறுமற்றனைவர்க்குமாகும். (சச)

தெரிந்தவேதியர்நாடொறுஞ்செய்கடன்வழாமற்
புரிந்தவோமவெண்ணீறவர்க்கல்லதுபொருந்தா
விரிந்தசாதிகளெவற்றிற்கும்வெவ்வழனஞ்ச
மருந்தினன்றிருநீற்றினையணியலாமன்றே. (சரு)

தலையினிற்றினையணிந்திடிற்றழைத்தவீர்ங்கதிர்க
ணிலவுவெண்மதிசேர்தருநெற்றியினணியி
னிலகுகண்மலர்பொருந்திடுமெழிற்கழுத்தணியின்
மலருமொண்கதிர்மணிநிறமடைந்திடுமாதோ. (சசா)

சுந்தரத்தடந்தோளினிற்றுலங்கநீறணியிற்
கொந்தழற்கொலைமழுவொடுகன்றுமான்குலவு
முந்திமீதினிலணிந்திடிலுடனும்வெஞ்சினத்த
வெந்திறற்புலியதளுடைமேவிடுமன்றே. (சஎ)

வேறு.

தலையினுதலிற்றடமார்பினுந்தித்தடத்தின்முழந்தாளின்
மலையினுயர்ந்ததிணிதோளின்மணிகண்டத்தின் முன்கைதனி
லிலகுகழுத்திற்சுவன்மிசையிற்பஞ்சப்பிரமமெடுத்தோதி
நிலவ்பொழியும்வெண்ணீறுநெறியினணிதல்வேண்டுமால்.

இறைவனீறுபுனையாமலிழைத்தவினைகள்பயனுதவா
நெறியின்வெண்ணீறணிந்துகதிர்விலவுபுனையுமுழுமுதலை
முறையினியற்றிவழிபட்டான்முத்திபெறுவதெளிதாகும் [ம்
கறைசேர்மிடற்றான்பூசையினதியல்புஞ்சிறிதுகட்டுரைப்பா

பிறவிக்கடற்கோர்புணையாகும்பெம்மான்பூசையாங்கதனை
நெறியிற்புரிபாவாக்கைதனைநிலையென்றிருக்குங்கொடியோ
முறையிற்றிகிரிதனையுருட்டிமுந்நீருலகமினிதளிக்கு [ரை
மிறைவன்சினவிக்கான்போக்காதிருக்கிற்பாவமெய்துவனால்.

மண்ணின்மணலிற்சிலைதன்னிற்படிகமுதலாமாமணியி
னண்ணும்பஞ்சலோகத்தினிழைத்தலிங்கநன்னகரின்
விண்ணினுயருந்தடவரையின்விரைசேர்காவிற்பேராற்றின்
றண்ணந்துறையின்வழிபடுவாரழியாமுத்திநெறிசார்வார். ()

திருந்துதவத்தாலுயர்குடிமிச்செம்பொனியயப்பொருப்
பின்ற,முருந்தின்முறுவற்கொடிபாகன்பூசைமுறையிற்புரியா
மற், புரிந்தவினைகள்பயன்படாபொங்கியெழுந்தபசிதீர, வரு
ந்துமுணவுநாயூணேயாமென்றுரைக்குமருமறையே. (௫௨)

சீர்சால்கமலப்பொகுட்டிருந்துதெண்ணீருலகம்படைப்ப
துவு, மேர்சார்பசும்பொற்றருவினிழலிருந்துவானமளிப்பது
வும், கார்சேர்மேனித்திருமாலாயுலகமனைத்துங்காப்பதுவும்,
வார்சேர்முலையாள்பாகனைமுன்வழிபட்டவர்தம்பேறுமால்.

என்றுமறையோனியம்புதலுமிகல்வேலரசர்முடியுரிஞ்சு,
துன்றுகழற்கால்விறல்வேந்தன்சுடர்வெண்மதிய முடித்தபி
ரா, னன்றியிறைவனில்லையெனவறிந்தானறிந்தாங்கவன்று
ணைத்தாண், மன்றற்கமலமலர்பரவிவணங்கிக்கேட்டானஞ்
செழுத்தே. (௫௩)

எழுத்தஞ்சவன்றன்செவிப்படலுமெறிக்குஞ்சுடர்முன்னி
ருளேபோற், றழைத்தவினைநோய்தணிந்தொழியத்தணியாவு
வகைக்கடன்மூழ்கிக், குழைத்தகளிர்ப்பூங்கொன்றையணிகு
ழகன்கமலமலர்ப்பாதம், வழுத்தித்தொழுதானிறையவனும
ழவேறிவர்ந்துவெளிப்பட்டான். (௫௫)

வெளிவந்தெய்துமிறைபோனைவீழ்ந்துதொழுதுபேரின்ப க்,களியின்மூழ்கித்தனிமுதலேகருணைக்கடலேமெஞ்ஞான, வொளியினொளியேயருட்பசுந்தேனெழுகுமுக்கட் கொழுங் கனியே, தெளியுமமுதேயென்றென்றுசிந்தையுருகிப்பரவி னனுல். (ருசு)

பரவுமன்னன்முகநோக்கிவிழைந்ததென்னைபகரெனவெ ன், மரபின்வந்தோரியாவருநின்மலர்த்தாட்கன்பராய்முடிவி, னெரிபொற்குடுமிவெள்ளிவரையெய்தல்வேண்டு மெனக்கூ ற, விரைசெய்கடுக்கைமாலைபுனைவிமலன்வழங்கிமறைந்த னனுல். (ருஎ)

பொன்னங்குடுமியெயிலுடுத்தநகரிற்போய்ந்தன்புதல்வ னைநீ, முன்னம்போலவகன்ஞாலமுழுதும்புரத்தியெனப்ப ணித்தே, யன்னுண்மருங்குற்றேவியொடுங்கான்போயரியத வமாற்றி, மன்னர்மன்னன்மணிமிடற்றோன்மலர்த்தாட்கம லமலர்சேர்ந்தான். (ருஅ)

வீரசேனன்பிணிதீர்ந்தசருக்கமுற்றிற்று.

ஆக செய்யுள் - சுருஅ.

# சயந்தன்விணதீர்த்தசருக்கம்.

கேட்டலுமுவகைவெள்ளங்கிளர்ந்தெழுமுனிவரின்னம்
பாட்டிளவண்டுமூசப்பச்சிளந்தென்றனூரும்
கூட்டினும்புன்னைநீழற்குழகன்றன்காதைகேட்பான்
வேட்டனமென்னச்சூதன்மீளவும்விளம்பலுற்றான். (க)

புலத்தியன்புதல்வன்றேவியரும்புபுன்மாலைக்காலை
நலத்தகுகொழுநன்றன்னைநசையினுற்கலத்தியென்னக்
கலத்தலினரக்கனுகிக்கண்ணகன்ஞாலமஞ்ச
வுலத்தொடும்பொருதகுதிண்டோளிராவண னுதித்தானன்றே.

பூவுறையவனைநோக்கியருந்தவம்புரிந்தபோதிற்
றேவரூற்செருக்கலாகத்திண்டிறல்வலியினோடு

மூவுலகாளுஞ்செல்வம்பெற்றனன்முறையினீங்கித்
தாவருஞ்சீற்றத்துப்பினழித்தனன்றவங்களெல்லாம். (௩)

முயலுநற்றவத்தினோடுமூதறங்காப்பானன்பாய்க்
கயிலையினுறைபுமுக்கட்கடவுடன்னேவல்பூண்டு
தயரதன்புதல்வனாகிப்பிறந்தனன்றயங்குசெஞ்சுட்
டயிலெயிற்றரவப்பள்ளியறிதுயிலமர்ந்தவள்ளல். (௪)

பூசல்வண்டார்த்துமூசும்பூந்தளிரலங்கன்மாலை
யீசன்வார்சிலையிராமனெனப்பெயர்புனைந்துபாரின்
மாசறவிளங்குகோட்டுமதியெனவளருநாளிற் [ன்.
கோசிகன்வேள்விகாப்பான்கொண்டனன் வனத்திற்சென்று

தாடகைமடியநூறித்தவமுனிவேள்விபோற்றி
யாடகப்பசும்பொன்மாடமிதிலையிலடைந்துவிண்டோய்
கோடுயர்பசும்பொற்குன்றமன்னவிற்குழையவாங்கி
வாடுநுண்மருங்குற்சீதைதவனமுலைவேட்டானன்றே. (௬)

மையலங்களிநல்லியானைமறங்கிளர்தந்தைகூறு
மெய்புரைசிறுத்தல்வேண்டிவெஞ்சிலைராமன்கானிற்
செய்யபூங்கமலநீத்துத்திருவுறைமிதிலைவந்த
வையநுண்மருங்குற்செவ்வாயணங்கொடுமேவினானே. (௭)

சித்திரகூடஞ்சேர்ந்துதேமருதுளபமாயோன்
றத்தரிபரந்தவுண்கட்சானகிகுறங்கிற்சென்னி
வைத்தனன்றுயிலுங்காலைமற்றவண்முலையின்மீது [ன்.
கொத்தினன்காக்கையாகிக்கொடுந்தொழிற்சயந்த னென்பா

சில்லரிநெடுங்கட்பேதைதெருமரலுழந்துமாழ்கி
மல்லலைத்தெழுந்ததிண்டோண்மன்னவன்றுயிலைநீக்கி
யல்லலுற்றுரைத்தலோடுமவனழலம்புகொள்ளத்
தொல்லுருவெடுத்துவீழ்ந்துதொழுதனன்சயந்தன்மன்றே.

மழைநிறவண்ணல்பொற்றாமரையடியிறைஞ்சியேத்திப்
பிழையதுபொறுத்தியென்னவவனருள்புரியப்பெற்றுந்
தொழுதகுகற்பின்றேவிதுணைமுலைதொட்டவாற்றாற்
பழியுறுகாக்கைத்தன்மைநீங்கிலன்பரிவுகொண்டான். (௧௦)

மல்லலங்கங்கைசூழ்ந்தவளமலிகாசியாதித்
தொல்லையம்பதிகள்சேர்ந்துதுய்நதிப் புனல்கடோய்ந்தும்
புல்லியகாக்கைத்தன்மைபோகலனுகியுள்ள
மல்லலுற்றமுங்கிநாணியகலிருவிசும்பிற்போனன். (கக)

இன்றளிர்த்தருவினீழலிந்திரனவையினெய்திக்
கன்றியமனத்தினேடுகண்கணீர்வாரவெள்கி
நின்றதன்புதல்வற்குற்றதன்மையைநெஞ்சிலெண்ணி
யொன்றுநீகவலலென்றுங்குரைசெய்வான்றொடங்கினனே.

சேர்ந்தநின்காக்கைத்தன்மைதெண்ணிலாக்குழவிவேய்ந்த
பாந்தளங்கற்றைவேணிப்பரமனுலன்றித்தீரா
தேந்துவெண்கோட்டுவேழத்தீருரிபோர்த்ததேவன்
பூந்துணர்முருகுவிம்முபுன்னையங்காவொன்றுண்டால். (கஙு)

ஆங்குநீயெய்திமுக்கணண்ணலுக்களித்தியென்ன
வீங்கிருட்பிழம்புமேயும்விழுமணியாரநல்கித்
தீங்கறச்சேறியென்னச்செப்பலுங்குலிசவேந்தன்
பூங்கழல்வணங்கியேகிப்புன்னையம்பொதும்பர்புக்கான் (கச)

மணிதெளித்தனையவாவிமறிதிரைப்புனலின்மூழ்கி
யணிகிளராரஞ்சாத்தியண்ணலைவழிபட்டேத்தித்
தணவருங்காக்கைத்தன்மைதணந்தனன்மகிழ்ச்சியெய்தி
யிணர்விரிதருவினீழலிந்திரனிருக்கைசேர்ந்தான். (கரு)

சயந்தன்வினைதீர்த்தசருக்கமுற்றிற்று.

ஆ. செய்யுள் - சரு௬.



# கானவன்வீடுபெற்றசருக்கம்.

என்னலுமுவகைபூத்தவிருந்தவமுனிவரின்னும்
புன்னையம்பொதும்பர்சீறுபுகலெனப்பரவலோடுங்
கொன்னுனைச்சூலமேந்துங்குழகனைவணங்கிச்சூதன்
பின்னுமோர்காதைதேர்ந்துபேசுவான்றொடங்கினனே. (க)

மலர்தலையுலகினுலாம்வருணத்தான்றனக்குத்தாழும்
புலைமகள்வயிறுவாய்த்தபுதல்வன்மற்றொருவன்வேலை
யலைமுகங்கிழிக்கும்வைப்பாற்றகன்கரைமருங்கினெய்தி
யெலிகவர்வேட்கைதூண்டவிருநிலமகழ்ந்திட்டானே. (௨)

அகழ்ந்திடுநிலத்திலுங்கோரருநிதிக்குடமொன்றோன்ற
மகிழ்ந்தனன்கொண்டுபோய்த்தன்மரபினைமறைத்துஞால
மிகழ்ந்திடக்கருப்பைவௌவுமியல்பினையொழிந்துகாம
நிகழ்ந்துளங்கனற்றவாற்றுநெறிகடந்தொழுகினானே. (௩.)

பின்னவன்குலத்துட்டோன்றும்பிணையெனு மதர்வைநோக்
கன்னிமற்றொருத்திதன்னைக்கடிமணம்புரிந்தம்மாதின் [கி
பொன்னவிர்திதலைபூத்தபுணர்முலைப்போகந்துய்த்து
நன்னிதிக்குப்பையெல்லாநாளினிலழிந்திட்டானே. (௪)

வறியனாய்க்கொலைகள்செய்துமரபினோரிகழப்பட்டு
விறகுவிற்றயின்றுவாழ்நாள்விறகதுவிற்பான்வேண்டிச்
சிறைபளிகுடைந்துபாடத்தேங்கமழ்கடுக்கைவேணிக்
கறைமிடற்றிறைவன்வாழும்புன்னையங்காவிற்புக்கான். (௫)

விலைப்படவின்றியாங்கோர்வீங்கிருட்போதுவைகி
யலைத்தெழுபசியினாற்றாதவனெழுந்தகாலை
மலர்ச்சுனைத்தெண்ணீருண்ணவருதலுந்தளர்ந்துமாழ்கித்
தலைப்படுவருத்தந்தன்னாற்றடங்கரைவீழ்ந்திட்டானே. (௬)

அளியுடைமனத்தாற்கண்டோராங்கவனுற்றமம்மர்
தெளிவுறமுகத்திற்றெண்ணீர்தெளித்தனர் தெளிக்கப்பெற்
தளர்வுறுபசியினுற்றமூர்ச்சனைதவிராதாகி [றுந்
விளைதரவழிவுசோர்ந்துமெய்யுயிர்நீங்கினானே. (௭)

ஓரிராவைகலானுமொலிகெழுசுனையின்றெண்ணீர்
தீர்கலாமம்மர்தீரத்தெளித்திடப்படுதலானு
மேரிணர்விரித்தபுன்னைவனத்தினிலிறத்தலானுங்
கார்தொடநிவந்தகோட்டுக்கயிலைசென்றடைந்தான்மன்னோ.

கானவன்வீடுபெற்றசருக்கமுற்றிற்று.

ஆ. செய்யுள் - ௪௯௧.

# கன்மாடச்சருக்கம்.

என்றுகூறமறைமுனிவரிழிந்தகுலத்திற்றோன்றியுயிர், கொன்றான்மிசைந்தகொடும்பாவிகுளிர்பூஞ்சுனையி னீர்தெ ளிப்ப, மன்றல்கமழுமலர்ப்புன்னைவனத்தினெய்தியுள்ளாவி, பொன்றப்புரிந்ததவமென்னைபுகல்வாயென்ன முனிபுகலும்.

திகழ்வெண்முத்தமலைசுருட்டுந்தேவியாற்றந்தடங்கரையி ற், றுகடீர்மறையின்றுறைபோயவாமதேவன்முதலானோர், முகின்மென் முலையாளொருபாகன்முளரி மலர்த்தாளிணை போற்றி, நகுமாமலர் தூஉய்த்தவமாற்றிநாளுமுவந்துவை குவரால். (உ)

திரைசெயாற்றந்தடங்கரையிற்றிங்கட்சடையானடிபரவு, மரியதவத்துச்சிவராதனென்னப்புகலுமந்தணற்குத், தரும சிந்தையெனக்கற்பாற் றழைக்குமனையாள் வயிற்றுதித்தா, னொருவனுளனற்கன்மாடனென்னுநாமமுடையோனே. (ங)

சாற்றும்புதல்வனொருஞான்றுதந்தையேவற்றொழில்பூ ண்டு,போற்றுமோமவிறகினொடுந்தருப்பைகவர்ந்துபோதுங் கா, லாற்றினிடையேயெதிர்ப்பட்டவாவொன்றதனையாழ்ந்த கருஞ், சேற்றிற்றள்ளவாங்கதுவுஞ்சேற்றிலாழ்ந்துதுஞ்சி யதால். (ச)

மைந்தன்வெருவிச்சவிமழுங்கிமனைவாயடைந்தகாலையினி ற், றந்தைநோக்கியென்புரிந்தாய்தயங்குமொளிதீர்ந்திருக்கி ன்றாய், சிந்தைவெருவல்செய்தவினைசெப்பிற்றீர்க்குமாறுன க்கு, முந்துநூல்கண்டுரைப்பனெனவவனும்புரிந்தவினைமொ ழிந்தான். (ரு)

கேட்டுவெருவித்தீர்க்குநெறிதன்றற்கிளத்தலரிதென்று, வேட்டுமுத்தீநெறிவளர்க்குமெய்நான்மறையோரவை யெய் தி, யீட்டும்பாவமுரைத்திடலுமிருந்தமறையோர்களிலொரு வன், கோட்டமில்லாவருங்குணத்தோன்குறித்துக்கூறலுற் றனனால். (சா)

பாவமிதுபோற்கொடிதில்லைப்பகரிலிவன்றன் குலத்தோரை.
மூவேழ்முறையின்வெந்நரகின்முழுகுவிக்குமஃதறிந்து
நீவிரிவனைநீத்திடுமினிகழ்ந்தபாவநும்மிடத்து
மேவல்செய்யாதீசனடிவிரும்பிவழுத்துந்தன்மையினல். (எ)

என்றுபுகல்வற்பயந்தோர்பாலியம்பவுள்ளநெக்குற்று
நின்றபுதல்வன்றனைநோக்கிநெடுநீர்க்காசிமுதலபதி
சென்றுதொழுதியாங்காங்குச்சேர்ந்தவணங்குநல்வினையான்
மன்றல்கமழுமலர்ப்புன்னைவனத்திஙெய்தப்பெறுதியால். ()

மொய்த்துச்சுரும்பரொருகோடிமுரலும்புன்னைவனம டைந்து, துத்தியரவமுள்ளெயிற்றுற்றெருட்டவந்நண்சுனைமூழ்கிப், பைத்தபாம்புசடைக்கணிந்தபரமன்பசும்பொற்கழலிணைகள், சித்தமுருகவணங்கில்வினைதீர்ந்துகயிலைசென்றடைவாய். (கூ)

வேறு.

எந்நதிபடிந்திடினுமீசனுறைகின்ற
புன்னைவனமோடுநிகழ்பொங்கரவவாவி
தன்னுளநினைந்துவிரிதண்புனல்படிந்தார்
முன்னைவினைதீர்ந்திறைவன்மூதுலகுசேர்வார். (கO)

பாண்முரலும்வண்டுகள்படிந்துநறவுண்ண
நாண்மலர்மணங்கமழுநாகசுனையாட
நீணிலவரைப்பினினைந்தவரையேனுங்
காணில்வெருவுற்றகல்வர்காலபடர்மாதோ. (கக)

பாயலைதவழ்ந்தபணிவாவிவிளையாட்டி
ஞயினுமுழுங்குபுனலாடின்வினையெல்லாம்
போயகலவெண்மதிபுனைந்தவனிருக்குஞ்
சேயுயர்நெடுங்கயிலைசென்றடைவர்மன்னே. (கஉ)

தெய்வமறைமந்திரநவின்றுசிறைவண்டின்
கௌவைமலிபூஞ்சுனைகருத்தொடுபடிந்தா
ரெவ்வழியடைந்துயிரிறந்திடுவரேனு
மைவழிமிடற்றிறைவன்வாழுலகுசேர்வார். (கங)

மார்கழிதொடங்கிமதிமூன் றுசுனைபாடி
யோரொருபகற்பொழுதிநோர்பிடிகுறைந் தண்
டார்வமொடுபுன்னைவனமேவியமர்கிற்பார்
தீர்வரியவல்வினைகடீர்ந்துசிவனுவார். (கச)

மாசிமகத்தாயிதழ்மலர்ச்சுனையின் மூழ்கி
நேசமுறவெள்ளிநெடுநீர்க்கடனிரப்பிற்
றேசுறுவதாகுமெனத்தென்புலத்தினுறைவோ
ராசிபகர்செய்வர்தமகங்களிசிறந்தே. (கரு)

கார்த்திகையிற்சாகநுகராதுகமழ்போது
பூத்தசுனையாடிவளர்புன்னைவனமேவி
யேத்தியிறைபொனடியிறைஞ்சில்வினையெல்லா
நீத்துவளர்பொற்றருவினிழலுறைவாரே. (கசா)

ஆவணியின்வெங்கதிரின் வாரமதினந்தண்
வாவியிடைமூழ்கினவர்வல்வினைதொலைப்பார்
மேவுமகரந்தனில்விரிந்தசுனையாடிற்
பாவமெவையேனுமவர்பற்றுவிடுமன்றே. (சஎ)

வெள்ளிபுறுமாயிலியநாளில்விரைநாறு
தெள்ளுசுனையாடியிறைசேவடிவணங்கி
யுள்ளமகிழ்பாலடிசிலந்தணருக்கூட்டிற்
கள்ளொழுகுகொன்றைபுனைகடவுளுலகடைவார். (கஅ)

போதுமணநாறவளிபொங்கரவவாவி
யாதிரையிலாடிலமரர்க்கிறைவனுவார்
மூதறிவின்வைகறுெ றுமூழ்கினவர்பேறு
நாதனலதார்புகல்வர்நாகவிலற்பாற்றே. (கக)

வேறு.

வரையுயிர்த்தபசுங்கொடிமாதவம்
புரியுங்காலையிற்பொன் னுலகத்துறை
யரமடந்தயராங்கறியாவகை
யுரவுருருத்தாங்கியுறைந்தனர். (உ0)

தூயவாளராத்தொட்டிகொலையி
லாயபூஞ்சுனைதோன்றியதாங்கதன்
பாய்புனற்கட்படிந்தவர்பேற்றினை
மாயனாலுமுரைத்திடவல்லதோ. (உக)

தோடலர்ந்ததுளிதறவுண்டளி
பாடுபூஞ்சுனைத்தென்றிசைப்பாதலத்
தாடுபாய்நதியுண்டதன்பாங்கெலாம்
வீடுபூந்தருவாயினர்விண்ணவர். (உஉ)

என்னவோடுமிசைத்துமறையவன்
பொன்னந்தாமரைச்சேவடிபோற்றுபு
வன்னவாவுயிர்செற்றமறையவன்
நன்னதிப்புனலாடநயந்தனன். (உங)

கங்கையாதிகடலுலகத்தினிற்
பொங்குமாநதிப்பூம்புனன்மூழ்கியுந்
தங்குபாவந்தணந்திலனெய்தினன்
மங்குல்கண்படுபுன்னைவனத்தினே. (உச)

அரவவார்சுனையாடியரும்பவிழ்
விரைசெய்கொன்றைமிலைந்தவிறைவனைப்
பரவிநெஞ்சினுட்பாவித்துவல்வினை
யிரியும்வண்ணமிருந்தனன்மூன்றுநாள். (உரு)

சடையுந்திங்களுந்தாழும்புலியத
ளுடையுமங்கைபொலிருந்திறன்மழுப்
படையுந்தாங்கிப்பசுங்கொடிபங்கினன்
விடையின்மீதுவெளிவந்துதோன்றினான். (உசு)

கண்ணுநெஞ்சுங்களித்திடக்கண்டுதன்
னுண்ணிறைந்தவுவகையின்மூழ்கலு
மண்ணறன்னுருநல்கினனங்கது
நண்ணியேத்திநவிலலுற்றனரே. (உஎ)

செய்தவம்பலசெய்யினுமன்னுரு
வெய்துதற்கரிதாமெவர்க்காயினும்

கொய்துணர்ப்பொலங்கொன்றையந்தாரினுய்
நொய்துநான்பெறகோற்றனனென்றனன். (உஅ)

என்னலோடுமிறைவனியம்புவான்
மன்னுமாதவமாற்றியெம்வாளரா
முன்னந்தொட்டசுனைப்புனன்மூழ்குவோர்
துன்னுவல்வினையாவுந்தொலைப்பரால். (உகூ)

யாங்கிருப்பினுமின்னவனத்திடை
யோங்குமன்பொடுறைபவிரும்புவார்
நீங்கலாவினையாவையுநீத்துநந்
தீங்கிலாவருள்சேர்வதுதிண்ணமே. (௩0)

தாவிலந்தணர்சாதிமுதலினோ
ரியாவராயினுமேடவிழ்புன்னையங்
காவினெஞ்சங்களிபுறவைகினன்
மேவருந்தனிவீட்டுலகெய்துவார். (௩க)

வேறு

மாயிருஞாலந்தன்னின் மற்றுநம்பதியின்மேவி
யாயிரம்பிறப்பிற்றீராவருந்தவம்புரியுநன்றி
சேயுயர்விசும்புதோயும்புன்னையங்காவிற்சேர்த
லேயுமத்தலத்திலாவியிறத்தல்வந்தெய்திடாதே. (௩௨)

பணிமுடிகிடந்தஞாலப்பரப்பின்முறப்பவத்திலக்க
மணிபகர்வணிகனீயம்மணிகளை வயங்கமெய்யி
லணிகிலேயெனினுங்கையாற்றொடுதலான் மறைநூலாய்ந்த
துணிவுறுசிவராதற்குத்தோன்றலாபுதித்தாய்மன்னே. (௩௩)

நம்முடைப்பதிகளெல்லாநாடினைதிரிந்தபேற்றுன்
மைமுகிறவழும்புன்னைமலர்வளந்தன்னிலெய்தி
யம்மலர்ச்சுனையிற்றெண்ணீராடினையதனுலிங்கே
யெம்முருவெய்தப்பெற்றுயிருவினைதொலைந்துமாதோ. ()

விரியிருள்பருகும்பைம்பொன்விமானமேற்கொண்டுவெள்ளி
யருவரையடைதியென்னவாங்கவனடைந்தானாக
வெரிமணியிமைக்குஞ்செஞ்சூட்டிலங்குவா ளெயிற்றுநாகம்
பரவுசிவலிங்கத்தினுறைந்தனன்பகவன்மாதோ. (௩௫)

ஆயவன்றனுமுன்னைப்பிறப்பிலோராயனாகி
யேயுமோர்பொருள்கொளாமலீசனைப்பரவுகின்ற
தூயவர்க்கேவல்கேட்டதன்மையாற்சுருப்புபாட
வாய்விரிமலர்ப்பூம்புன்னைவனத்திடைவந்தான்மன்றோ. ()

அத்தலைவிறகுவிற்பானடைந்துழிப்பசியின்மாழ்கித்
துத்திவாளரவந்தொட்டசுனைப்புனறெளிக்கப்பெற்றுங்
கெய்த்துதோரிளைப்பாலாவியிறந்திடப்பெற்றபேற்றான்
முத்தலைச்சூலமேந்துமுதல்வன்வாழ்கயிலைசேர்ந்தான். (௩௭)

அறிந்திலனாகியோர்நாளவ்வுழியொன்றுமுண்ணா
துறைந்தவனழிவிலாதவுயர்கதியெய்தப்பெற்றா
னிறைந்தபேரறிவானாடிநெஞ்சுகந்திருக்கப்பெற்றார்
பெறுங்கதியெம்மனோராற்பேசலாந்தகைமைத்தன்றே. ()

விரைப்புனற்கமலத்தண்ணணிகர்தருவிபாதன்மேனா
ளுரைத்தவாறுரைத்தேனின்னநூலினைபுரைப்போருள்ளத்
தருத்தியாய்க்கேட்டல்செய்வோரகலிருவிசும்புகீண்ட
வரைச்சிலைகுழைத்தவீசன்மலரடிக்கன்பராவார். (௩௯)

கோட்டமில்குணத்தாலிந்நூல்குழைவொடுநவிலல்செய்
வோர்,கேட்டுளங்களிவோர்நெஞ்சங்கெழுமுபேரன்பினாலே,
தீட்டுதல்புரிவோர்தீட்டியருச்சனைசெய்புநீரார்,வேட்டனவே
ட்டவெல்லாம்விரைவினிலெய்துமாதோ. (௪0)

துளிப்பசுந்தேறன்மாந்தித்துதைந்துமெல்லரும்புமூசிக்
களிச்சுரும்பரற்றுபுன்னைவனத்துறைகடவுடொன்னூ
லுளத்தினில்விருப்பாற்றீட்டியுணர்வுசாலந்தணாளர்க்
களித்தவரசுவமேதம்புரிந்தபேறடைவர்மன்னோ. (௪௧)

விண்ணவர்க்கிறைவன்கூழைவிமலநற்காதைகேட்போர்
தண்ணுளங்குழைந்துகூறுந்தகைமையோர்க்கருளவேண்டு
மண்ணலம்பசும்பொன்றூயவலங்கொளியானையென்று
னெண்ணருந்தவத்தோர்போற்றுமிருந்தவச்சூதன்றானே. ()

மூவுலகினிதுவாழிமுதுமறைவாழி தூய
தாவிலாமறையோர்வாழிதையலாவுடையாள்பங்கின்
மேவியவிறைவன்காதைவிருப்புடன்படிப்போர்கேட்போ
ரோவறுகிதிபெற்றோங்கியுவப்பொடும்வாழிதானே. (சு௩)

கன்மாடச்சருக்கமுற்றிற்று.

ஆ செய்யுள் - ௫௦௪.



ஏட்டிணர்சேர்புன்னைவனத்தீர்ஞ்சடைவானவன்றன்
னூலெழுதாவேத, நாட்டுபராசரன்மதலைநவின்றபடிசெந்த
மிழானவிலலுற்றான், கோட்டுவரிச்சிலைகுனித்துக்கோளுழு
வைதுரந்திமையக்குன்றநெற்றி, திட்டுசெழுங்கயல்பொறி
த்தசீவலபூபாலனியற்செழியர்கோவே.

சங்கரநாராயணசுவாமிகோயிற்புராணம்

முற்றுப்பெற்றது.

---



# பிழை திருத்தம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௬ | ௧௯ | ௩ | வுரைத்த | உரைக்க |
| ௫ | ௧௧ | ௧ | பருங்கயத்தி | பருங்கையத்தி |
| ௬ | ௧௮ | ௩ | வரைத்தினை | வரைத்திணை |
| ,, | ௧௯ | ௧ | றளவமும | றளவமும் |
| ௭ | ௩ | ௨ | மடவியரானவர் | மடவியராடவர் |
| ,, | ,, | ௪ | வாரிசைப்பாம் | வாறிசைப்பாம் |
| ௧௧ | ௨௯ | ௪ | மருநும் | மருதம் |
| ௨௪ | ௬௭ | ௩ | காணிறை | காணிரை |
| ௩௦ | ௧௮ | ௨ | பாசுபதாத்திரமதாகும் | பாசுபதாத்திரமாகும் |
| ௩௨ | ௨ | ௨ | வேகவிட | வேகவிட |
| ௩௩ | ௬ | ௧ | போகிகளியிற்றிய | போகிகளியற்றிய |
| ,, | ௯ | ௧ | பாவுயர் | பாவியர் |
| ௩௪ | ௧௨ | ௪ | பொருடா | பொருட்டா |
| ௩௬ | ௨ | ௧ | யன்னீர் | யனணீர் |
| ,, | ,, | ௪ | அறமுதநான்கும் | அறமுதனன்கும் |
| ௩௭ | ௪ | ௪ | மந்தச்சங்கர | மிந்தச்சங்கர |
| ௪௬ | ௩௬ | ௩ | நருவுயர்த்த | நருவுயிர்த்த |
| ,, | ,, | ௩ | மேன்மலர் | மென்மலர் |
| ௪௭ | ௪௦ | ௧ | வாரு | வாழ |
| ௫௧ | ௬௬ | ௧ | மாலுங் | மாலுன் |
| ௫௩ | ௧௪ | ௪ | மண்கனை | மண்கனை |
| ௫௭ | ௮ | ௧ | விடங்கண் | தடங்கண் |
| ௬௨ | ௧௯ | ௨ | தோன்தனை | தோன்றனை |
| ௯௪ | ௩௧ | ௪ | பேற்றையறையற் | பேறறையற் |
| ௯௫ | ௩௬ | ௩ | பான் | யான் |
| ,, | ௪௦ | ௨ | பணி | யணி |
| ௯௯ | ௬ | ௨ | மிதிலே | மிதுலே |
| ,, | ௭ | ௩ | மிநிலே | மிதுலே |
| ,, | ௧௦ | ௧ | மறையடி | மரையடி |